


டாக்டர் – மு. வரதராசன், எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பன் கல்லூரி

விற்பனை உரிமை :

பாரி நிலையம்

59, பிராட்வே, சென்னை - 1

ரூ. 1—4—0

இரண்டாம் பதிப்பு : பிப்ரவரி 1957

உரிமை ஆசிரியர்க்கு

ஆசிரியரின்

மற்ற நாடக நூல்கள் :

இளங்கோ

காதல் எங்கே

மனச்சான்று

சாது அச்சுக்கூடம், இராயப்பேட்டை, சென்னை - 14

# முன்னுரை

தமிழ்நாடு வண்மையின் எல்லையையும் கண்ட நாடு. ஈதலையே வாழ்தலின் ஊதியமாகக் கொண்ட வள்ளல்கள் பலர் தோன்றிய நாடு இது. பதினெட்டாம் நூற்றாண்டில் அறம் பல புரிந்த வண்மையாளராய்த் திகழ்ந்த தமிழர் பச்சையப்பர். அவருடைய அறநெஞ்சமே இன்று ஆயிரக்கணக்கானவர்களுக்குக் கல்விச் செல்வத்தை வழங்கும் அறிவு நிலையங்களாக விளங்குகிறது.

இத்தகைய அறவோரின் வரலாற்றைப் பலரும் அறிதல் நலம். உயர்வு நவிற்சியும் திரிபும் இல்லாமல் உள்ளவாறே விளக்கும் நாடகமாக இச்சிறுநூல் அமைந்துள்ளது. தமிழகம் இதனை வரவேற்கும் என நம்புகின்றேன்.

5—10—51 மு. வ.

## காட்சி : 1

### கி. பி. 1754

**இடம் :** பெரியபாளையத்தில் ஒரு தோப்பு.

**காலம் :** பிற்பகல்.

**மாந்தர்:** வேலைக்காரர் இருவர் : முனியன், எல்லன்.

முனியன் : டே எல்லா ! நம் ராயர் வீட்டிலே ஓர் அம்மா இரண்டு பெண்குழந்தைகளோடு வந்திருக்கிறார்களே, அவர்களுக்கு மேலண்டைத் தெருவிலே இருக்கிற சின்ன வீட்டை ஒழுங்குபண்ணச் சொன்னா'ருடா.

எல்லன் : அப்படியா ? அந்த அம்மா இந்த ஊரிலேயே இருக்கப்போகிறார்களா ? பார்த்தாலே நல்ல மகராசி போலத்தான் தெரியுது.

முனி : யாரு'டா அவர்கள் ? எந்த ஊர் ?

எல் : ராயர்அம்மாவைக் கேட்டேன். சொன்னார்கள் ; அந்த அம்மா ஊர் காஞ்சிபுரமாம். விசுவநாத முதலியார் என்று அடிக்கடி காஞ்சிபுரத்திலே இருந்து ஒருத்தர் வந்து முன்னெல்லாம் ராயரோடு எந்நேரமும் பேசிக்கொண்டிருப்பாரே, தெரியாது ?

முனி : ஆமாம் ஆமாம் !! தோப்புக்குக்கூட வந்து அடிக்கடி பார்த்துவிட்டு இளநீர் குடித்துவிட்டுப் போயிருக்கிறார். ராயர்கூட, அடிக்கடி காஞ்சிபுரத்துக்குப் போவார் ; முதலியார் கொடுத்தார் என்று என்னென்னவோ கொண்டுவருவாரே, அவர்தானே ?

எல் : அவரேதான். அவர்தான் விசுவநாத முதலியார்.

முனி : ஆமாம், இந்த அம்மா யார் ?

எல் : அந்த விசுவநாத முதலியாருடைய வீட்டுக்கார அம்மா.

முனி : ஆமாம் : இந்த அம்மா ஏன் இங்கே வந்தார்கள் ? அடடா ! அறுத்துவிட்டவர்கள் போல் இருந்ததே. என்ன சமாச்சாரம் ? முதலியார்—?

எல் : காலமாகி மூன்று மாசம் ஆச்சே.

முனி : அட பாவமே ! அய்யய்யோ ! காஞ்சிபுரத்து முதலியாரா இறந்துபோய்விட்டார் ? ராயருக்கு ரொம்ப வேண்டியவர் ஆச்சே ! என்ன உலகம்'டா இது !

எல் : அவ்வளவுதான் இந்த அம்மா கேட்டுவந்தது. சின்ன பெண்குழந்தைகள் இரண்டு. போதாத குறைக்கு இப்போது பிள்ளைத்தாய்ச்சியாம்.

முனி : அட தெய்வமே ! இப்படிப்பட்ட குடும்பத்துக்கே இந்தக் கதியானல், நம்மைப் போன்றவர்கள் பாடு என்ன ?

எல் : அட, நம்ம பாடே எவ்வளவோ மேல். நான் செத்தால் என் பெண்டாட்டி கூலி வேலே செய்து எப்படியாவது பிழைத்துக்கொள்வாள். ஆனல் அந்த மாதிரிக் குடும்பத்தில் அடுத்த நாள் பிழைக்க வழி இல்லேயே.

முனி : ஆமாம். சொத்து இல்லேயா ?

எல் : ராயர்அம்மா சொன்ஞர்கள். அப்படி ஒன்றும் சொத்து இல்லேயாம். விசுவநாத முதலியார் இருந்த வரைக்கும் குடும்பத்துக்குச் சம்பாதித்துப் போட்டுக் கொண்டிருந்தாராம். ஒன்றும் பணம் சேர்த்து வைக்கவில்லேயாம். சின்ன வீடும் ஏதோ ஒரு காணி நிலமும் இருக்கிறதாம். இருந்தாலும், திக்கற்ற குடும்பம் ஆச்சே என்று, குழந்தைகளோடு பெரியபாளேயத்

துக்கே வந்து இருக்கும்படி ராயர்தான் ஏற்பாடு செய் தாராம்.

முனி : அய்யோ பாவம் ! அதனால்தான் இங்கே வந்துவிட் டார்களா ? அப்படிச் சொல்லு, அதனால்தான்—.

எல் : அது சரி ; உன்னை ஏன் இங்கே அனுப்பினார்கள் ? அதைச் சொல்லு.

முனி : அதுதான்'பா. அந்த மேலண்டை வாடையில் சின்ன வீடு இருக்கிறதே, அதைக் கொஞ்சம் ஒழுங்கு படுத்தச் சொன்னார்கள். பின்புறம் மறைப்புக்காகத் தென்னை ஓலையில் கட்டிவிடு என்று சொன்னார்கள். அதற்காக முப்பது நாற்பது கீற்று எடுத்துக்கொண்டு போகலாம் என்று வந்தேன்'பா.

எல் : அடே, முனியா ! அதோ வருகிறார்களே அவர்கள் யார் ?

முனி : ஆர்க்காட்டுச் சுபேதாரின் ஆட்கள் போல் தெரி கிறது. சுபேதார் ஏதாவது தாக்கீது அனுப்பியிருப்பார். ராயர் வீட்டில் இல்லை என்று இங்கே வருகிறார்களா ?

எல் : இருக்கலாம், பொறு.

வந்தவர்கள் : நீங்கள் தோட்டத்து ஆட்களா ? ராயர் அய்யா இந்தப் பக்கம் வந்தாரா ?

எல் : வரவில்லையே ! என்ன செய்தி ? ஏதாவது சொல்ல ணுமா ?

வந் : ஒன்றும் இல்லை. சுபேதாரிடமிருந்து ராயர் அய்யா வுக்குக் கடிதம் கொண்டுவந்தோம். வீட்டில் கொடுத்து விட்டோம். ராயர் அய்யா தோப்பில் இருந்தால் பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்தோம்.

எல் : சாப்பிட்டீர்களா ?

வந் : இந்த இடத்துக்கு வந்த பிறகு சாப்பாட்டுக்குக் குறைச்சலா ? சாப்பிட்டுத்தான் வந்தோம்.

எல் : சரி. தோப்பில் இருங்கள். சாயுங்காலமாக அய்யா வைப் பார்க்கலாம்.

(வந்தவர்கள் தோப்பைப் பார்த்துக்கொண்டே அப் பால் செல்கிறார்கள்.)

முனி : சுபேதாரிடத்தில் நம்ம ராயர் இட்டது சட்டமாமே.

எல் : எல்லாம் அவருடைய திறமை, நல்ல மனம்.

முனி : நல்ல மனம் இல்லாவிட்டால், கர்ப்பவதி இரண்டு பெண் குழந்தைகளை அழைத்துக்கொண்டு நம்பி வரு வார்களா ?

எல் : அதைச் சொல்லு. இரண்டு குழந்தைகளில் ஒன்று ஆணாக இருக்கக் கூடாதா ? எப்படியாவது ராயர் படிக்கவைத்துச் சுபேதாரிடத்தில் சொல்லி ஏதாவது உத்தியோகம் வாங்கிக் கொடுப்பார்.

முனி : யார் கண்டார்கள்? பிறக்கிற குழந்தை ஆண்குழந்தை யாக இருக்கலாம். அந்தக் குழந்தையே நாளைக்குச் சீமான் ஆகிவிடலாம். சுபேதார் என்ன ? நவாபிட மும் ராசாக்களிடமும் உத்தியோகம் பார்க்கலாம். அந்தப் புண்ணியவதி கேட்டுவந்திருந்தால், வயிற்றில் பிறக்கிற அந்தக் குழந்தை வெள்ளைக்காரக் கும்பெனிக் காரரிடமே பெரிய உத்தியோகம் பார்க்கலாம்.

(ஒரு தென்னைமரத்தில் பல்லி டிக் டிக் எனல்.)

எல் : முனியா ! உன் வாக்குப் பலிக்கும்'டா, அதோ அந்தத் தென்னை மரத்தில் பல்லி சொல்லுது'டா. அதிலே பல்லி சொன்னால், தவறாமல் நல்லபடி பலிக் கும்'டா. நான் எத்தனையோ முறை பார்த்திருக்கி றேன். அன்றைக்கு அப்படித்தான் பசு கன்று போடும் என்று நினைத்தேன். இதே மாதிரி பல்லி சொன்னது. வீட்டுக்குப் போனால், பசுவும் கன்றுமாகக் கண்ணாலே பார்த்தேன்.

முனி : என்னவோ, பாவம்! அந்த மகராசியைப் பார்த்தால் தங்கமான அம்மாவாகத் தெரியுது. முகத்திலே களை வடியுது. ஓர் ஆண் குழந்தை பிறந்தால் குடும்பம் பேர் சொல்லும். சரி, நான் போய் வந்த வேலையைப் பார்க்கிறேன்.

(தோப்புக்குள் எதையோ பார்த்தபடி போகிறான்.)

## காட்சி : 2

### கி. பி. 1758

**இடம் :** *பெரியபாளையம் : ஒரு சின்ன வீட்டுக் கூடத்தில்.*

**காலம் :** *நண்பகல்*

**மாந்தர் :** *பச்சையப்ப முதலியாரின் தாயார் பூச்சிஅம்மாள், பக்கத்துவீட்டு ராமு ரெட்டி மனைவி வேங்கடம்மாள், வேலைக்கார முனியன்.*

வேங்கடம்மாள் : *ஏன்'மா அழுகிறாய்? அழுதால் என்ன பயன்?*

முனி : *நீங்களே சொல்லுங்கள் அம்மா ! இந்த அம்மா அழுவதைப் பார்த்துவிட்டு, அதோ அந்தப் பெண் குழந்தைகள் அழுகிறார்கள். பையன், பாவம் ! ஒரு கவலையும் தெரியாமல் இளங்கன்று போல வளர்ந்தான் ; அவன் முகத்திலும் இன்றைக்குக் கவலை இருக்கிறது.*

வேங் : *எங்கே பையன் பச்சையப்பன் ?*

முனி : *இதோ இப்போதுதான் வழியிலே பார்த்தேன்'மா. பள்ளிக்கூடத்துக்குப் போகிறான். குழந்தை சுவடி எடுத்துக்கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் போவதைப் பார்த்தாலே, எப்படிப்பட்ட கவலையும் பஞ்சாய்ப் பறக்குமே அம்மா ! உனக்கு என்ன'மா குறைச்சல் ? பச்சையப்பன் - எங்கள் மகராசன் - வளரட்டுமே. இந்தப் பூமியை ஆளப்போகிறான், பாரேன். நவாப், கும்பெனி எல்லாம் பச்சையப்பன் சொன்னபடி கேட்கவேணும். பாரேன்.*

வேங் : *அழாதே, பூச்சியம்மா, அழாதே. முனியன் சொல்வது போல், உனக்கு மக்களே சொத்து, செல்வம். உனக்கு ஏன் கவலை ?*

முனி : இந்த அம்மாவுக்கு மட்டுமா ? ராயர்அய்யா போய் விட்டதும் எனக்கும் எப்படிப் பிழைக்கப்போகிறோம் என்று தெரியவில்லை. என் தலைமேலேயே இடி விழுந்தது போல்தான் இருக்கிறது.

வேங் : பூச்சியம்மா ! சொன்னால் கேள். அழுதால் வருமா ? அதற்கு என்ன செய்யலாம் ? நீ கேட்டுவந்தது அவ்வளவுதான். இன்னும் கொஞ்ச நாள் ராயர் உயிரோடு இருந்தால், உன் பையன் எவ்வளவோ முன்னுக்கு வந்திருக்கலாம். வயிற்றிலே இருக்கும்போதே அப்பனை அனுப்பிவிட்டான். வந்த இடத்திலும் இப்படி ஆச்சு !

முனி : இந்த அம்மா வந்து ஐந்து பொங்கல் வந்துபோச்சு. இத்தனை வருசமா, ராயர் எவ்வளவோ அன்பாகக் காப்பாற்றினார்.

வேங் : அய்யோ ! எனக்குத் தெரியுமே. போன புரட்டாசியில்தானே ராயர் பச்சையப்பனைப் பள்ளிக்கூடத்தில் போட்டார். அழுகிற பையனைத் தட்டிக்கொடுத்து அழைத்துக்கொண்டு போனாரே. தன் பிள்ளைகளோடு இவனையும் ஒரு பையனாக நினைத்து எல்லாம் செய்தார், பாவம் !

பூச்சிஅம்மாள் : பையன் எழுதுகிறானா, படிக்கிறானா என்று கேட்பார். தகப்பன் இல்லாத பையன் இனிமேல் யார் அப்படிக் கேட்கப்போகிறார்கள் ? (அழுதல்)

வேங் : எல்லாருக்கும் கடவுள் இருக்கிறார். மரம் வைத்தவன் தண்ணீர் வார்க்காமல் விட்டுவிடுவானா ? நீ அப்படிக் கவலைப்படாதே.

பூச்சி : அய்யோ ! சொந்தக்காரரையும் நம்பாமல் என் மக்களை அழைத்துக்கொண்டு இங்கே வந்தேனே ! தாய்வீட்டுக்குப் போவது போல் நினைத்து வந்தேனே !

வேங் : தாய்வீடு போலத்தான் இருந்தது. எனக்குத் தெரியாதா ? நான் எங்கே போயிருந்தேன் ? எல்லாம் பக்கத்து வீட்டிலிருந்து கவனித்துக்கொண்டுதான் வந்தேன். போனதை நினைத்துப் பயன் இல்லை. இனி மேல் ஆகவேண்டியதைப் பார் அம்மா.

பூச்சி : இனிமேல் என்ன செய்யப்போகிறேன் ? இனிமேல் இங்கே இருந்து எப்படிப் பிழைக்கப்போகிறேன் ? இருக்கிற கொஞ்சம் சொத்தையும் யார் கவனித்து என் மக்களுக்குக் கஞ்சி வார்க்கப்போகிறார்கள் ?

வேங் : பூச்சியம்மா ! நான் சொல்வதைக் கேள். எனக்கு ஒரு வழி தோன்றுகிறது. கெட்டுப் பட்டணம் போ என்று சொல்வார்கள். பேசாமல் பட்டணம் போ. அங்கே எப்படிப்பட்டவர்களுக்கும் ஏதாவது பிழைப் புக்கு வழி ஏற்படும். எத்தனையோ பேர் அங்கே போய்ப் பிழைத்து நல்லபடி இருப்பதைப் பார்த்திருக் கிறேன். ஒருத்தர் இல்லாவிட்டாலும் ஒருத்தர் ஆதரிப் பார் பட்டணத்தில். எங்கள் அண்ணன் ஊரில் இருந்த போது ஓட்டாண்டியாய் இருந்தான். பட்டணம் போய்ச் சேர்ந்து கால்வயிற்றுக் கஞ்சி கிடைத்தது. பிறகு நல்ல தொழில் கிடைத்துக் கையில் காசும் சேர்த் துக்கொண்டான்.

பூச்சி : ஆண்கள் போனால் எப்படியாவது பிழைத்துக் கொள்வார்கள். நான் பெண். போய் என்ன செய்வது ?

வேங் : அப்படிச் சொல்லாதே அம்மா ! நீ போனால் நல்ல படி பிழைக்கலாம். பையனும் முன்னுக்கு வருவான். எனக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள். ஒற்றை வாடைப் பக்கத்தில் சாமிமேஸ்திரி தெருவில் எங்கள் அத்தைமகன் இருக்கிறார். அங்கே போய் இரு•

அவர்களே வழி சொல்வார்கள். தைரியமாய்ப் போய் இரு. கவலையே வேண்டாம்.

பூச்சி : முன்பின் தெரியாத ஊரில் நான் மக்களை வைத்துக்கொண்டு என்ன செய்வேன் அம்மா ?

வேங் : வேண்டுமானால், எங்கள் வீட்டுக்காரர் வரட்டும். அவரைக் கேட்டு உனக்கு நம்பிக்கையாக வந்து சொல்வேன். அவரைத் தபால் எழுதச் சொல்வேன்.

பூச்சி : செய் அம்மா ! என் தலைவிதி எப்படியோ அப்படி ஆகட்டும்.

வேங் : ஏழு வருசத்துக்கு முன்னே நாங்களே அங்கே போக வேண்டும் என்று இருந்தோம். ஆனால் எங்களுக்கு இங்கே இருக்கிற நிலபுலத்தை விட்டுவிட்டுப் போக மனம் வரவில்லை. உனக்கு அந்தக் கவலை இல்லை அம்மா. பேசாமல் போகலாம்.

முனி : அம்மா இவ்வளவு தைரியமாகச் சொல்லும்போது, தெரிந்தவர்கள் இருக்கும்போது, உனக்குக் கவலை ஏன் அம்மா ? உன் குணத்துக்கே எங்கே போனாலும் யாரும் உதவியாக இருப்பார்கள் அம்மா.

வேங் : எழுந்திரு'மா. எழு எழு. சாப்பிட்டு வேலையைப் பாரு. நம் வேலையை நாம்தானே செய்ய'ணும் ? நானும் போய் வருகிறேன். சாயுங்காலம் வருவேன். (போகிறாள்.)

முனி : நீ ஒன்றும் பயப்படாதே அம்மா ! வாய் நல்லா இருந்தால் ஊர் நல்லா இருக்கும். நீ இங்கே வந்த அஞ்சு வருசத்திலே இந்தப் பெரியபாளையமே உனக்குச் சொந்த ஊர் ஆய்விட்டதே. அப்படித்தான் பட்டணமும். (சிறிது அமைதி). நானும் போய் அப்புறம் வருவேன்'மா. (போகிறான்.)

(பூச்சிஅம்மா தலை குனிந்தபடி துயரப்படுதல்.)

## காட்சி : 3

### கி. பி. 1759

**இடம் :** சென்னை சாமிமேஸ்திரி தெருவில் வடபுற மேலண்டைக் கோடியில் உள்ள வீட்டின் தாழ்வாரம்.

**காலம் :** இரவு 11 மணி. எல்லோரும் உறங்கும் நேரம். மக்கள் மூவரும் உறங்குதல்.

**மாந்தர் :** பூச்சிஅம்மாள்.

(பூச்சிஅம்மாள் தனியே இருந்து கைமேல் மோவாய் வைத்தபடி சோர்ந்து எண்ணுதல், பெருமூச்சு. சுவரில் தொங்கும் காமாட்சி படத்தைப் பார்த்துக் கைகுவித்துச் சொல்கிறார்).

தெய்வமே ! இந்தக் குழந்தைகளை வைத்துக் கொண்டு எப்படிக் காப்பாற்றப்போகிறேன் ? பெண் குழந்தைகள் பெரிய குழந்தைகளாக முன்னே பிறந்து விட்டார்களே. ஆணாக இருந்தாலும் இவ்வளவு கவலைப் பட மாட்டேன். (அமைதி, பெருமூச்சு.) பெரிய பெண்ணுக்குக் கலியாண வயசு ஆகப்போகிறதே. நான் என்ன செய்யப்போகிறேன் ? இந்தப் பெரிய பட்டணத்தில் ஒரு மூலையில் இருந்துகொண்டு என்னால் என்ன செய்ய முடியும் ? திக்கில்லாத பாவியாக இருக்கிறேனே. இருக்கிற சொத்தையும் பார்த்து, சரியாக வருவாய் கொண்டுவருவதற்கும் யாரும் துணை இல்லையே. (அமைதி, பெருமூச்சு.) நான்தான் அலைய வேண்டும் என்றால், என் மக்களும் இப்படி அலைய வேண்டுமா ? கையில் காசு இல்லாமல் என்ன செய்யப்போகிறேன் ? பெரியபாளையத்தில் ராயர் உயிரோடு இருந்தால், எனக்குக் கவலையே இருக்காதே. பச்சையப்பன் படித்து

முன்னுக்கு வந்திருக்கலாமே. இப்போது அவனுடைய படிப்பைக் கவனிக்கவும் ஆள் இல்லையே.

(எழுந்து காமாட்சியின் படத்துக்கு எதிரே நின்றபடி கண்ணீர் விடுகிறாள். கும்பிடுகிறாள். மறுபடியும் உட்கார்ந்து கவலைப்படுகிறாள். சோர்ந்து உறங்குகிறாள்.)

## காட்சி : 4

### கி. பி. 1759

**இடம் :** மூன்றாவது வீட்டு நடை.

**காலம் :** காலை 10 மணி.

**மாந்தர் :** பூச்சிஅம்மாள், பவுனி நாராயணப்பிள்ளையின் வீட்டு வேலையாள்.

வேலையாள் : வா'ம்மா ! காஞ்சிபுரத்தம்மா, வா. நானே உங்கள் வீட்டுக்கு வரலாம் என்று இருந்தேன். அதற்குள் உங்கள் பையன் பச்சையப்பன் இப்படி எங்கேயோ போய் எதையோ வாங்கிக்கொண்டு போனான். அவனைப் பார்த்ததும் அவனிடத்தில் சொல்லி அனுப்பினேன்.

பூச்சி : ஆமாங்க. பையன் பச்சையப்பன் வந்து சொன்னான். நீங்கள் என்னத்துக்கோ வரச்சொன்னீர்களாம்.

வேலை : ஆமாம்'மா. வேறே ஒன்றும் இல்லை. நேற்று இரவு என் வீட்டுக்காரி சொல்லிக்கொண்டிருந்தாள். உன்னைப் பற்றித்தான் சொல்லிக்கொண்டிருந்தாள். பாவம், அந்தக் காஞ்சிபுரத்தம்மா இரண்டு பெண் குழந்தைகளை வைத்துக்கொண்டு எவ்வளவோ கவலைப் படுகிறார்கள் என்று என்னிடம் அவள்தான் சொன்னாள்.

(பூச்சிஅம்மாள் பேசாமல் தலை குனிந்து கண்கலங்குதல்.)

வேலை : உட்காரம்மா, அப்படி. பாவம், உட்காரு. கெட்டு நொந்த குடும்பம் என்பது உங்களைப் பார்த்தாலே தெரியுது. (பூச்சிஅம்மாள் மூலையில் நின்றபடியே இருத்தல், உட்காரவில்லை.)

வேலை : கொஞ்சம் சொத்தும் இருக்கிறது என்றும், அதைச் சரிவரக் கவனிப்பதற்கு யாரும் இல்லை என்றும் சொன்னாள். உங்களுக்கு இந்த ஊரில் உறவு யாரும் இல்லையா அம்மா ?

பூச்சி : இருக்கிறார்கள். தொலைவான உறவு. அவர்களிடத்தில் போனால் பயன் இருக்காது'ங்க.

வேலை : அய்யோ பாவம் ! நீ ஒன்றும் கவலைப்படாதே அம்மா. பெண்குழந்தைகளை யாராவது ஏழைக்குப் பார்த்துக் கட்டிக்கொடுத்துவிட்டால் அப்புறம் உனக்கு என்ன கவலை ? பையன் ஒருத்தன் இருக்கிறான். அவனைப் பற்றிக் கவலையே இல்லை. ஆண் பிள்ளை, எப்படியாவது முன்னுக்கு வந்துவிடுவான். நாலு எழுத்துக் கற்றுக்கொண்டால், ஏதாவது ஒரு வழியில் பிழைத்துக்கொள்வான். அவனும் அப்படி ஒன்றும் எங்கள் பிள்ளைகளைப் போல் மந்தமாக இல்லை. முகத்தைப் பார்த்தாலே, எங்கள் எசமான் வீட்டுப் பையனைப் போல் நல்ல களை இருக்கிறது. அவனே பெண்பிள்ளைகளுக்கு முன்னே முதல் குழந்தையாகப் பிறந்திருந்தால் குடும்பத்தையே அவன் காப்பாற்றுவான். ஊம் ; இருந்தாலும் என்ன'ம்மா ? வளரட்டும்.

பூச்சி : பேசாமல் ஊருக்கே திரும்பிப் போய்விடலாம் என்று பார்த்தால் அதற்கும் வழி இல்லை'ங்க.

வேலை : அந்த வேலைமட்டும் செய்யாதே அம்மா. எங்கே இருக்கிறவர்களும் பட்டணத்துக்கு வந்து பிழைக்கிறார்கள். கும்பினி வியாபாரம் நடக்கிற இடம் இது. எப்படியும் நாலு காசு கிடைக்கிற இடம். இங்கே வந்த பிறகு இதை விட்டுவிட்டுப் போவதா? கோழைமனம் உனக்கு.

பூச்சி : இங்கே இருந்து என்ன பண்ணுவது'ங்க ? ஊருக்குப் போனாலும், பட்டினி இருந்து செத்தாலும் கேட்பார் இல்லை.

வேலை : அதற்குத்தான் வீட்டுக்கு வந்து சொல்லலாம் என்று இருந்தேன்'மா. எங்கள் எசமானைப் பற்றி உனக்குத் தெரியாது. தங்கமான மனிதர் ; தங்கம் என்றால் பத்தரை மாற்றுத் தங்கம்தான். எத்தனையோ ஏழைக் குடும்பங்களை முன்னுக்குக் கொண்டுவந்திருக்கிறார். ஒரு முறை நம்பிவிட்டால் கைவிட மாட்டார். ஒரு சொல் சொல்லிவிட்டால் அரிச்சந்திரன்தான்.

பூச்சி அவர் பெரிய பணக்காரர். எவ்வளவோ வேலை இருக்கும். என்னைப் போல் ஏழையைக் கவனிக்க அவருக்கு என்ன ?

வேலை : அதுதான் இல்லை'மா. இவர் பணக்காரராக இருந்தாலும் தனியான குணம்'மா. நீ சொல்வது உண்மைதான். பணக்காரர் எப்பொழுதும் ஏழைகளைக் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. இவர் அப்படி அல்ல'மா. ஏழைகளாக நல்லவர்களாக இருந்தால் கைவிட மாட்டார் அம்மா. நானும் இருபத்தைந்து வருஷமாகப் பழகுகிறேன். தெரிந்துதான் சொல்கிறேன். நீ வேண்டுமானால் யாரையாவது கேட்டுப்பார். பவுனி நாராயண பிள்ளை என்றால், இந்தப் பட்டணம் முழுதிற்கும் தெரியும். யாரைக் கேட்டாலும் அவருடைய குணத்தைப் பற்றிச் சொல்வார்கள்.

பூச்சி : பவுனி என்றால், சொந்த ஊரா ?

வேலை : இல்லை'மா, இல்லை. பவுனி என்று ஒரு வெள்ளைக்கார துரைக்குப் பேர். எங்கள் எசமான் அவரிடத்தில் நெடுங்காலமாகத் துபாஷ் வேலை பார்த்தவர். அதனால் அவருக்குப் பவுனி நாராயணபிள்ளை என்றே பெயர்

ஆயிற்று. அவருக்கு இந்தக் கும்பினிக்காரத் துரைகள் அத்தனை பேரும் நன்ருகத் தெரியும். அவர் சொல்லித் தான் நம் தமிழர் எத்தனையோ பேருக்குக் கும்பினி யில் வேலைவாங்கிக் கொடுத்திருக்கிருர். அவர் ஒரு சொல் சொன்னுல், கும்பினிக்காரரும் தட்ட மாட்டார்கள் ; நவாபுகூட அவர் சொல்லை அப்படியே எடுத்துக்கொள் வார். அவ்வளவு செல்வாக்கு இருக்கிறது. ஒன்று சொல் கிறேன், கேள் அம்மா. செங்கல்பட்டு ஜில்லாவில், நெய்த வாயல் என்ற கிராமம் இருக்கிறதே, அது இவருக்கு நவாபு கொடுத்ததுதான். ஆனல் மனிதருடைய பெருந் தன்மையைப் பார் அம்மா. நவாபு கொடுத்த கிராமத் தைத் தனக்கு என்று வைத்துக்கொண்டாரா ? அது தான் இல்லை. அங்கே ஒரு சத்திரம் கட்டி அந்தக் கிரா மத்து வருவாயைச் சத்திரத்துக்கே ஏற்பாடு செய்திருக் கிருர். தானம் தருமம் நல்ல சிந்தனை எங்காவது பார்க்க வேண்டும் என்ருல், எங்கள் அய்யாவிடத்திற்குத்தான் வர வேண்டும். அப்படிப்பட்டவர் அம்மா !

பூச்சி : நானுக எப்படிங்க அவரிடத்தில் போவது ?

வேலை : அதைப் பற்றி நீ ஒன்றும் கவலைப்படாதே'ம்மா. நானே சொல்கிறேன் அவரிடத்தில். பகலில் சாப் பிட்ட பிறகு அய்யா கொஞ்ச நேரம் தூங்கி எழுவார். சரியாக மூன்று மணிக்கு நீ அங்கே வா. நான் இருப் பேன். நானே உன்னைப் பற்றிச் சொல்வேன். எல் லாரும் கையால் தருமம் செய்தால், நான் வாயால் செய்யக் கூடாதா ?

பூச்சி : அப்படியே வருகிறேனுங்க. உங்கள் புண்ணியம்.

வேலை : அதற்கென்ன'மா ? நீ ஒன்றும் தயங்காமல் வா. 'உங்கள் பொறுப்பு' என்று சொல்லிவிடு அம்மா. அவர் பார்த்துக்கொள்வார். பிள்ளைகள் மூன்று பேரை யும் அழைத்துக்கொண்டு வா'ம்மா.

## காட்சி : 5

### கி. பி. 1760

**இடம் :** பவுனி நாராயணபிள்ளையின் வீடு.

**வேளை :** காலை 10 மணி

**பாத்திரர் :** பவுனி நாராயணபிள்ளை, வேலையாள், பூச்சிஅம்மாள்.

பவுனி : பையன் பச்சையப்பன் கெட்டிக்காரன் அம்மா. வாத்தியாரிடத்தில் விட்டு இன்னும் ஒரு வருசம் ஆக வில்லை. தமிழ் கற்றுக்கொண்டான். கணக்கும் போடு கிறுனும். இங்கிலீஷும் கற்றுக்கொடுங்கள் என்று வாத்தியாரைப் பார்த்து நேற்றுச் சொன்னேன். எல் லாம் கற்றுக்கொள்வான், பார் அம்மா.

பூச்சி : எல்லாம் உங்கள் புண்ணியம் அண்ணு! உங்கள் பார்வை இருந்தாலே போதும் அண்ணு. அவன் எப்படி யாவது முன்னுக்கு வருவான்.

பவுனி : அதிலே ஒன்றும் சந்தேகம் இல்லை'மா. நீயே பார்க்கப்போகிறுய். இன்னும் நாலைந்து வருசம் படித் தால் போதும். இந்தக் காலத்திலே கணக்குக் கொஞ்சம் தெரிந்து இங்கிலீஷ் பேசத் தெரிந்துகொண்டால் போதும். ஆங்கிலேயருடைய கிழக்கிந்தியக் கம்பெனி யில் பழக்கமாய்விட்டால், எப்படிப்பட்டவனும் வியா பாரம் தரகு ஏதாவது செய்து நல்ல பணம் சம்பாதிக்க லாம். பச்சையப்பனை அந்த வழியில்தான் விட வேண் டும் என்று இருக்கிறேன்'மா.

பூச்சி : உங்கள் விருப்பம் போல் செய்யுங்கள் அண்ணு. எனக்கு என்ன தெரியும்? பையனை முன்னுக்குக் கொண்டுவர வேண்டியது உங்கள் பொறுப்பு அண்ணு.

வேலை : விளையும் பயிர் முளையிலே தெரியும். பொய் இல்லை அம்மா. பச்சையப்பன் எந்நேரமும் ஏடும் கையுமாக இருந்து ஏதாவது படித்துக்கொண்டு இருக்கிறார் அம்மா. நானே பார்த்திருக்கிறேன்.

பவுனி : பையனுக்குத் தாயின் துன்பம் தெரியும். தவிர, நல்ல புத்தியும் இருக்கிறது. என்னவோ, குடும்பத்தின் பெயர் சொல்லட்டும். அவனைப் பற்றிக் கவலை இல்லை'மா. பெரிய பெண்ணுக்குக் கலியாணம் செய்ய வேண்டும். அதுதான் இப்போது முக்கியமான வேலை. அதற்காகத்தான் உன்னோடு பேச வேண்டும் என்று வரச் சொன்னேன்.

(வேலையாள் ஏதோ வேலையாக வெளியே செல்கிறான்.)

பூச்சி : எனக்கும் அதுதான் அண்ணா கவலையாக இருக்கிறது. எங்கேயாவது உங்களுக்குத் தெரிந்த இடமாக இருந்து பார்த்து முடித்துவிடுங்கள். பெண்ணுக்கு வயதும் ஆகிறது. இன்னும் வைத்துக்கொண்டிருக்கக் கூடாது.

பவுனி : புங்கத்தூரிலே எனக்கு நெடுங்காலமாகத் தெரிந்த குடும்பம் ஒன்று இருக்கிறது. அதுவும் முதலியார் குடும்பந்தான். அவர்களுக்கும் உங்கள் ஊரிலே காஞ்சிபுரத்திலே கொள்வன கொடுப்பன உண்டு என்று சொன்னார்கள். யாரையும் கேட்டுப் பார்க்க வேண்டியதில்லை. நல்ல குடும்பம் என்பதற்கு நானே பொறுப்பு. பிள்ளையும் நல்ல நடக்கையாக, கெட்டிக்காரனாக இருக்கிறான். தெய்வநாயகம் என்று பெயர். நம்ம சுப்பம்மாளுக்கும் அவனுக்கும் பெயர்ப் பொருத்தமும் இருக்கிறது. கொடுத்துவிடலாம் என்று எனக்குப் படுகிறது'மா. உன் விருப்பம் சொன்னால் அதன் படி செய்வேன். நீ என்ன சொல்கிறாய் ?

பூச்சி : எனக்கு ஒன்றும் தடையே இல்லை அண்ணு. நீங்கள் சொன்னுல் சரி. ஆனுல் எதற்கும் காஞ்சிபுரத்தில் இரண்டொருவரைக் கேட்டு, புங்கத்தூரில் பழைய உறவுதானு என்று தெரிந்துகொள்ளலாம். அதன் பிறகு முடித்துவிடுங்கள் அண்ணு ! (பல்லி சொல்லல், பூச்சி கைவிரல் தட்டல்.)

பவுனி : பல்லியும் நல்ல இடத்தில் சொல்கிறது. எடுத்த காரியம் நல்லபடி முடியும். அது முடிந்தால் ஒரு கவலை விட்டது. சின்ன பெண் அச்சம்மாளைப் பற்றி இப்போது கவலையே இல்லை.

பூச்சி : அச்சம்மாள் சின்ன பெண் அண்ணு !

பவுனி : ஆனுல், அவளுக்கும் சீக்கிரத்திலேயே கலியாணம் முடித்துவிடப் போகிறேன். கூடலூரில் வியாபார வகையில் எனக்குப் பழக்கமான முதலியார் குடும்பம் ஒன்று இருக்கிறது. அதுவும் நல்ல குடும்பம்தான். பிள்ளையும் நல்ல பிள்ளை. அவனுக்கும் அதே பெயர்-தெய்வநாயகம் என்று. பெரிய பெண்ணுக்கு முன்னே முடித்துவிட்டால், பிறகு இதையும் உடனே ஏற்பாடு செய்துவிடுவேன்.

பூச்சி : செய்யுங்கள் அண்ணு ! என்ன புண்ணியமோ ! நான் திக்கற்றுத் தெருவில் திரிய வேண்டியவள், உங்களிடத்தில் வந்து சேர்ந்தேன். குடும்பத்தில் யார் செய்த புண்ணியமோ !

பவுனி : அதெல்லாம் ஒன்றும் இல்லை'மா. நானு செய்கிறேன் ? எல்லாம் கடவுளின் கருணை. மனிதரால் என்ன ஆகும் அம்மா ? எல்லாம் அவனுடைய செயல்.

பூச்சி : போய் வருகிறேன் அண்ணு. (போகிருர்.)

பவுனி : நாளை மறுநாளை கேட்டு எல்லாம் சொல்கிறேன்'மா.

## காட்சி : 6

### கி. பி. 1768

**இடம் :** சாமிமேஸ்திரி தெருவில் வீட்டின்கூடம்.

**வேளை :** மாலை.

**பாத்திரர் :** பெரியபாளையத்து வேங்கடம்மாள், பூச்சியம்மாள்.

(வேங்கடம்மாள் வீட்டிற்குள் வருதல்.)

**பூச்சி :** வாங்க'ம்மா வாங்க. உங்களை அடிக்கடி நினைக்கிறேன். நினைக்காத நாள் இல்லை. வாங்க, உட்காருங்க.

**வேங் :** (உட்கார்ந்து) எல்லாம் நல்லபடி இருக்கிறீர்களா? பட்டணத்து வாழ்க்கை எப்படி இருக்கிறது?

**பூச்சி :** இருக்கிறோம் அம்மா; உங்கள் நல்லெண்ணம் நல்ல படியே வைத்திருக்கிறது. எல்லாம் நீங்கள் வழிகாட்டி அனுப்பியதுதானே. நல்ல மனதோடு அனுப்பினீர்கள். நல்லபடி இருக்கிறோம்.

**வேங் :** சொல்லியே இருக்குதே'மா; கெட்டுப் பட்டணம் போ என்று. அதைத் தெரிந்துதான் உங்களை இங்கே போகும்படி வற்புறுத்தி அனுப்பினேன். பெரிய பாளையத்திலே இருந்தால் எவ்வளவோ துன்பப் பட்டிருப்பீர்கள்.

**பூச்சி :** அது மெய்தான் அம்மா.

**வேங் :** எங்கே பெண், பிள்ளை, யாரும் காணோம். பெரிய பெண் சுப்பம்மாளுக்குக் கலியாணம் ஆய்விட்டது என்று முன்னமே கேள்விப்பட்டேன்.

**பூச்சி :** அதுதான்'மா கடவுள் பெரிய குறையாக வைத்து விட்டார். (கவலையோடு) ஒன்று போனால் ஒன்றாக இடி விழுந்தபடி இருந்தால் குடும்பம் என்ன ஆவது?

வேங் : (திடுக்கிட்டு) என்ன'மா அது ? எனக்கு ஒன்றும் தெரியாதே !

பூச்சி : நான் வந்த வழி அம்மா ! அவளும் சின்ன வயசிலேயே என்னைப் போல் ஆய்விட்டாள். கணவனை வாரிப்போட்டுவிட்டுப் பொழுதோடு வீட்டுக்கு வந்து விட்டாள் !

வேங் : அய்யோ மகளே ! அப்படியா ஆச்சு ! இந்தத் தெய்வத்துக்குக் கண் இல்லையா ? கடவுளே கடவுளே ! (சிறிது நேரம் அமைதி) குழந்தைகள் ?

பூச்சி : ஒரே ஒரு பெண்தான். ஏழு வயது ஆகிறது. அவள் தலையிலே அது ஒரு சுமை வந்து விழுந்தது.

வேங் : அய்யோ, பாவம் ! அவள் தலையில் எழுதியது யாரை விட்டது ? நாம் என்ன செய்ய முடியும்—? (சிறிது அமைதி) சின்னவள் ? பெயர் மறந்துவிட்டேனே.

பூச்சி : அச்சம்மாள். அவளுக்குக் கலியாணம் ஆய்விட்டது. மாமியார் வீட்டில் இருக்கிறாள்.

வேங் : பெரியவள் வந்திருக்கிறாளா ?

பூச்சி : இங்கேதான் இருக்கிறாள். வேறு எங்கே போவாள் ? இப்போதுதான் தன் பெண்ணை அழைத்துக்கொண்டு மூன்றாவது வீட்டுக்காரரோடு கோயிலுக்குப் போயிருக்கிறாள்.

வேங் : சின்னவளை எந்த ஊரிலே கொடுத்தாய் ?

பூச்சி : கூடலூரில்.

வேங் : நல்ல இடம்தானே ?

பூச்சி : ஒன்றும் குறைவு இல்லை'மா.

வேங் : பச்சையப்பன் வெளியே போயிருக்கிறானா ? அவன்மேல் எனக்கு அடிக்கடி நினைவு.

பூச்சி : அவன் ஊரிலே இல்லை'மா. வியாபார வேலையாகத் தெற்கே போயிருக்கிறான்.

வேங் : அப்படியா ? அவன் இன்னும் படித்துக்கொண்டு இருப்பான் என்று எண்ணிக்கொண்டிருக்கிறேனே.

பூச்சி : படித்து முடித்துவிட்டான். கும்பினி வியாபாரத்துக்கும் தரகு வேலைக்கும் வேண்டிய அளவு கற்றுக் கொண்டான். இங்கிலீஷும் பேசுகிறான். எப்படியோ பிழைத்துக்கொள்வான்.

வேங் : இன்னும் என்ன உனக்குக் குறைச்சல் ? கும்பினிக்குத் தரகு செய்தால், நல்லபடி நடந்தால் ஆயிரம் ஆயிரமாகச் சேர்க்கலாமே. இங்கிலீஷ் இரண்டு சொல் பேசத் தெரிந்தால் போதுமே. ஏராளமாகச் சம்பாதிக்கலாமே. ஏதோ நல்லபடி இருக்கிறான் அல்லவா ? அவ்வளவுதான் வேண்டியது. பெரியபாளையத்திலே இருந்தால் முன்னுக்கு வந்திருக்க முடியுமா ? பார்த்தாயா ?

பூச்சி : உண்மைதான் அம்மா. அந்தக் காலத்தில் நீங்கள் துணிந்து அனுப்பியதால்தான், இப்போது நல்லபடி இருக்கிறோம். வந்த இடத்தில் எனக்கு உடன்பிறந்த அண்ணன் போல ஒருத்தர் கிடைத்தார். அண்ணன் தம்பியும் அவ்வளவு உதவி செய்ய மாட்டார்கள். அவ்வளவு நல்லவர்.

வேங் : யாரம்மா அப்படிப்பட்டவர் ?

பூச்சி : பவுனி நாராயணபிள்ளை என்று ஒருவர் இருக்கிறார்.

வேங் : அவரா ? கேள்விப்பட்டிருக்கிறோம். மிகவும் நீதியானவர், தருமகுணம் உள்ளவர் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். இங்கே அல்ல, பெரியபாளையத்திலேயே கேள்விப்பட்டிருக்கிறோம். அவருடைய ஆதரவு இருந்தால் அதுவே போதும்.

பூச்சி : அவர் நிழலில்தான் இருக்கிறோம். அவர்தான் பச்சையப்பனைப் படிக்கவைத்தார். வியாபாரத்துக்கும்

தாருக்கும் வழி சொல்லிக்கொடுத்தார். வெள்ளைக் காரரிடத்தில் - கும்பினிக்காரரிடத்தில் - அழைத்துக் கொண்டுபோய்ப் பழக்கப் படுத்திவைத்தார்.

வேங் : அவரைப் பற்றிச் சொல்லாதே. எத்தனையோ குடும்பங்களுக்கு விளக்கு ஏற்றிவைத்த உத்தமர் அவர். எத்தனையோ பேருக்கு வெள்ளைக்காரரிடத்தில் உத்தி யோகம் வாங்கிக் கொடுத்திருக்கிறாராம்.

பூச்சி : ஆமாம் ஆமாம். இந்தப் பட்டணத்திலேயே நம்மவர்களில் அவர்தான் செல்வாக்கு உள்ளவர் ; அவர் சொன்னாலே எல்லாரும் மதிப்பு வைத்துக் கேட்கிறார்கள்.

வேங் : பச்சையப்பனுக்கு இப்போது வயசு என்ன ?

பூச்சி : பதினைந்து முடிந்து பதினாறுவது நடக்கிறது.

வேங் : சின்ன பையன்தான்.

பூச்சி : இருந்தாலும் வியாபாரம் திறமையாகச் செய்கிறா னும். பவுனிபிள்ளை அவர்களை சொல்லிப் பாராட்டினார். (உள்ளே போய், பாலும் வெற்றிலைபாக்கும் கொண்டு வந்து தட்டில் வைக்கிறார்.) சாப்பிடுங்கள் அம்மா ! நீங்கள் வீட்டுக்கு வந்தது எனக்கு எவ்வளவோ மகிழ்ச்சி.

வேங் : பச்சையப்பன் என்னை மறந்துவிட்டிருப்பான். சின்ன வயசிலே பார்த்தது.

பூச்சி : இல்லை'மா. உங்களை மறக்க முடியுமா ? அவன் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறான். அவன் சாப் பிட்டபோது, கட்டியாகத் தயிர் கொண்டுவந்து போட் டீர்களே, அதை இன்னும் சொல்லிக்கொண்டிருக்கிறான். ஒருமுறை பெரியபாளையம் போய்ப் பார்க்க வேண்டும் என்றும் சொன்னான்.

வேங் : பதினாறு வயசு என்றால், மீசை கரிக்கோடு இட்டு வந்திருக்குமே. நல்ல பெண்ணாக, குடும்பத்துக்குத் தகுந்தவளாகப் பார்த்து ஒரு கலியாணம் செய்துவிடு அம்மா. அதுதான் நீ செய்ய வேண்டிய கடமை. அவ்வளவுதான்.

பூச்சி : சின்ன பையன். அவனுக்கு என்ன அவசரம் ?

வேங் : அப்படி இல்லே'மா. இந்த வயசிலே கையிலே நாலு காசு நடமாடினால், அது என்ன என்னவோ பண்ணும். பச்சையப்பன் நல்லவன்தான். இருந்தாலும்—.

பூச்சி : அவன் அந்தக் கெட்ட வழிக்குப் போகவே மாட்டான். தானம் தருமம் என்று இருக்கிறது அவனுடைய மனம். நாலு காசு கிடைத்தால், இரண்டு காசு யாராவது ஏழைக்குத் தருமம் செய்துவிட்டுத்தான் வீட்டுக்கு வருகிறான். அதெல்லாம் நல்ல வழியில் நடக்கிறான்.

வேங் : காசு கிடைக்கும்போது இரண்டு எடுத்துச் சேர்த்து வைக்க வேண்டும். அது நீதான் செய்ய வேண்டும்.

பூச்சி : அந்த வேலையும் எனக்கு இல்லே'மா. முன்னே சொன்னேனே பவுனி பிள்ளை என்று, அவரிடத்தில் கொண்டுபோய்க் கொடுத்துவிடுகிறான். மாமா மாமா என்று அவரிடத்தில் அன்பாக இருக்கிறான். அவர் சொன்னபடி கேட்டு நடக்கிறான். மீதியாகும் பணத்தை அவர் சேர்த்துவைக்கிறார். அவர் அரிச்சந்திரன் போல உண்மையானவர். உடன் பிறந்த தங்கை போல் என்னிடம் அன்பாக இருக்கிறார்.

வேங் : அப்படித்தான் நடக்கவேண்டும். அதுதான் முன்னுக்கு வருவதற்கு வழி.

பூச்சி : அந்த அண்ணுதான் ஒருநாள் சொன்னர். சுப்பம்மாள்மகளைப் பச்சையப்பனுக்குக் கட்டிவிடலாம், இன்னும் மூன்று நான்கு வருசம் ஆகட்டும் என்று சொன்னர்.

வேங் : நல்ல யோசனைதான் அம்மா. அப்படிச் செய்தால் தான் வீட்டுக்குப் பொருத்தமாகப் போய்விடும். அப்படித்தான் செய்யம்மா !

பூச்சி : பச்சையப்பனும், அவர் சொன்னல், அந்தப் பேச்சைத் தட்ட மாட்டான். என் பேர்த்தி அய்யாளம்மாள் சின்ன பெண்தான். இருந்தாலும் அறிவு இருக்கிறது, நல்ல பெண்.

வேங் : சரிதான் அம்மா ! அப்படித்தான் செய்யணும். அதுதான் நல்லது. (மெல்ல எழுந்து) எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது.

பூச்சி : இரு'ம்மா இருந்து சாப்பிட்டுப் போகலாம். அதற்குள் மகளும் பேர்த்தியும் வந்திடுவார்கள்.

வேங் : இருக்கட்டும்மா. இன்னொரு நாள் வருவேன். அப்போது எல்லாரையும் பார்க்கணும். பச்சையப்பனும் இருந்தால் அவனையும் பார்க்கணும். போய் வருகிறேன் அம்மா.

பூச்சி : நாளை மறுநாள் வாங்க. பச்சையப்பன் வந்திடுவான். மறக்காமல் வாங்க'ம்மா.

(போகிருர் வேங்கடம்மாள்.)

## காட்சி : 7

### கி. பி. 1771

**இடம் :** பாலவாயற் சத்திரம், தண்டு இறங்கியிருக்கும் இடம்.
**வேளை :** காலை -11 மணி.
**மாந்தர் :** பச்சையப்பர், ஆங்கிலேயக் கம்பெனிச் சிப்பாய்கள் மூன்று பேர், பவுனி நாராயண பிள்ளையின் வேலையாள்.

வேலையாள் : (சிப்பாய்களைப் பார்த்து) துரைமாரே, துரைகளே ! இது பட்டணத்திலே இருந்து வந்த தண்டு தானு ? நேற்றுப் புறப்பட்டு வந்தீர்களா ?

சிப்பாய் ஒருவன் : What is he saying? துரை துரை What is it? Nonsense !

சிப்பாய் மற்றொருவன் : (இன்னொருவனைப் பார்த்து) You know this vernacular ?

சிப்பாய் இன்னொருவன் : (வேலையாளைப் பார்த்து) என்ன வேணும் ?

வேலையாள் : பச்சையப்பர் இருக்கிறாரா துரை ?

சிப்பாய் ஒருவன் : Oh that Pachaiyappa, the new clerk ?

சிப்பாய் மற்றொருவன் : He wants him ; I see.

சிப்பாய் இன்னொருவன் : போய்ச் சொல்கிறேன் - பச்சையப்பன் ?

வேலையாள் : ஆமாம் துரை, ஆமாம். கொஞ்சம் சொல்லி அனுப்புங்கள் துரை.

(சிறிது நேரம் கழித்துப் பச்சையப்பர் சட்டை தலைப்பாகையுடன் வருதல்.)

சிப்பாய் ஒருவன் : What is the matter ?

சிப்பாய் மற்றொருவன் : Let us see.
வேலையாள் : வாங்க அய்யா ! என்ன நீங்கள்—
பச்சையப்பர் : என்னப்பா நீ இங்கே வந்திருக்கிறாய் ? ஏன் வந்தாய் ?
வேலையாள் : என்ன அய்யா ! சொல்லாமலே வந்துவிட்டீர்களே ! அம்மாவுக்கும் சொல்லவில்லையாமே. அம்மா அழுதது அழுதபடியே இருக்கிறார்கள். அக்காவும் அழுதுகொண்டே இருக்கிறார்கள்.
பச்சை : குடும்பத்திற்கு வரும்படி போதவில்லை. இந்தத் துரை நல்ல சம்பளம் கொடுப்பதாகச் சொன்னார். அதனால் தண்டிலே சேர்ந்து விட்டேன்.
வேலை : அய்யா வந்திருக்கிறார், தேடிக்கொண்டு.
பச்சை : யார் ? (திடுக்கிட்டு) பவுனி மாமாவா ? எங்கே ?
வேலை : அதோ தெரு முனையில் ஒரு திண்ணைமேல் உட்கார்ந்திருக்கிறார். என்னைப் போய்ப் பார்த்துவிட்டு வரச்சொன்னார்.
சிப்பாய் ஒருவன் : Pachaiyappa ! What is it ? Any bad news ?
பச்சை : No, no. Uncle waiting. Wants to see me. I must go.
சிப்பாய் மற்றொருவன் : You must not leave the camp without permission.
சிப்பாய் இன்னொருவன் : Your own uncle ? Is he in this village ? Let him come here.
பச்சை : Yes, yes. (வேலையாளைப் பார்த்து) நான் உத்தரவு இல்லாமல் வெளியே போகக் கூடாது. தண்டில் சேர்ந்துவிட்டால் சட்டதிட்டப்படி நடக்கவேண்டும். நீ போய் மாமாவுக்குச் சொல்லு. நான் என்ன செய்யட்டும் ? மாமா ஏன் இவ்வளவு தூரம் வந்தார் ?

வேலை : உங்களைப் பார்த்துத் திருப்பி அழைத்துக்கொண்டு போவதற்கு.

பச்சை : (முகத்தில் மிகுந்த 'கவலையோடு) இப்போது அனுப்ப மாட்டார்களே. நீ போய்ச் சொல்லு. என்னைப் பற்றிக் கவலை வேண்டாம். நல்லபடி இருக்கிறேன். பட்டாளத்தில் இனிமேல் நல்ல சம்பளம் கிடைக்கும். சம்பளத்தை மாமா பேருக்கு அனுப்பிவிடுவேன். அதை வைத்துக்கொண்டு அம்மாவைக் குடும்பத்தை நடத்தச் சொல்லு. நான் அங்கே இருந்து என்ன செய்யப்போகிறேன்? நீ போய்ச் சொல்லு. என்னாலே மாமாவுக்கு எவ்வளவு தொல்லை? மன்னிக்கும்படியாகச் சொல்லப்பா.

வேலை : அதெல்லாம் கேட்க மாட்டார். அவரே இங்கே வரலாம் அல்லவா?

பச்சை : அய்யய்யோ! அவர் வரக் கூடாதே. வந்தால் பெரிய துரையிடத்தில் பேசி என்னை அழைத்துக் கொண்டு போய்விடுவாரே.

வேலை : அவர் கேட்டுக்கொண்டால் பெரிய துரை பேசாமல் அனுப்பிவிடுவார். பஞ்சாயத்து வந்திருக்கிறார் என்று நான் போய்ச் சொன்னாலே போதுமே. (பச்சையப்பர் பெருமூச்சு விட்டுக் கவலை தேங்கும் முகத்தோடு நிற்கிறார். வேலையாள் போகிறான்.)

சிப்பாய் ஒருவன் : Why, Pachaiyappa? Why do you look so sad?

பச்சை : Uncle...taking me home.

சிப்பாய் ஒருவன் : Why? I shall tell him. This is a good job. You have good prospects in the near future.

சிப்பாய் இன்னொருவன் : Mother wants you ? Dont you have brothers ?

பச்சை : No brother. Only son to my mother.

முதல் சிப்பாய் : We dont feel sorry. We have left mothers. They are thousands of miles away. All right ! It is left to you. Think over it.

இரண்டாம் சிப்பாய் : We will be losing a friend.

மூன்றும் சிப்பாய் : You have been a nice chap.

பச்சை : I dont want to go. But...

முதல் சிப்பாய் : All right ; Let us move. Take your own time and decide it.

*(சிப்பாய்கள் போகிறார்கள். பச்சையப்பர் தனியே நிற்கிறார்.)*

குரல் : *நீ நினைத்துவந்தது ஒன்று. எதிர்பாராமல் இப்படி ஆகிறதே. என்ன செய்வது ? வருகிற வருவாய் போதாமல் எட்டியும் எட்டாமல் குடும்பம் துன்பப்படுகிறதே என்று பட்டாளத்தில் சேர்ந்தாய். பெரிய துரை நல்லவர். 'நீ கெட்டிக்காரன், உனக்கு நல்ல சம்பளம் தருவேன், வந்துவிடு' என்று சொன்னார். நீயும் ஒத்துக்கொண்டாய். இப்போது என்ன செய்வது ?*

*எத்தனை நாளைக்குப் பவுனி மாமாவின் கையை எதிர்பார்த்துப் பிழைப்பது ? அதை நினைத்துத்தான் வந்துவிட்டாய். இப்போது அவரே நேரில் வந்து துரையிடத்தில் சொன்னால், துரை சரிதான் என்று அனுப்பிவிடுவாரே.*

பச்சை : *இப்படி அவரே புறப்பட்டு வருவார் என்று நான் எதிர்பார்க்கவில்லையே. இப்படி வருவார் என்று தெரிந்திருந்தால் நான் வந்தே இருக்க மாட்டேன்.*

குரல் : மாமா வந்தால், அவர் எதிரில் நீ வாய் திறக்கவே முடியாது. அவர் சொன்னபடி பேசாமல் வீட்டுக்குப் போக வேண்டியதுதான். உன் எண்ணமெல்லாம் வீணுகிவிட்டது.

மறுபடியும் பழையபடி தரகு வியாபாரம் செய்ய வேண்டியதுதான். நல்ல லாபம் இருக்கிறது. ஆனால், பாதிக்குமேல் தான தருமம் செய்யாவிட்டால் உன் மனம் கேட்கவில்லை. ஏழைகள் பொருள் கேட்டால் அதற்கு இல்லை என்று மறுக்க உன்னால் முடியவில்லை. பணக்காரர்கள், நிறையச் சம்பாதிக்கிறவர்கள் அப்படிச் செய்கிறார்கள். உனக்கு மனம் வரவில்லை.

குடும்பத்துக்கே போதவில்லையே, தான தருமம் இப்போது செய்ய முடியுமா என்கிறார் அம்மா. அம்மா சொல்வதும் சரிதான். ஆனால் இல்லாதவர் களுக்குக் கொடுக்காமல், நல்ல வழியில் செலவு செய் யாமல், பணம் சம்பாதித்தால் என்ன பயன் ? தம் வயிற்றுக்கு மட்டும் பணம் தேடுவதற்காகவா இந்த உலகத்தில் பிறந்தது ? அது ஒரு வாழ்வா ?

உத்தியோகம் கிடைத்தால் நிலையான தொழி லாக இருக்கும் என்று வந்தாய். கம்பெனி வெள்ளைக் காரரின் பழக்கம் இருந்தால் நாளைக்கு முன்னுக்கு வர லாம் என்று எண்ணிவந்தாய். குடும்பத்துக்குச் சம் பளத்தை அனுப்பிவிட்டால் அம்மாவும் அக்காளும் அந்த ஒரு பெண்ணை வைத்துக்கொண்டு கவலை இல்லா மல் பிழைப்பார்கள் என்று எண்ணி வந்தாய்.

உன் எண்ணத்தில் மண் விழுந்தது.

மாமாவுக்குக் குறுக்கே பேச முடியாது. சரி, பேசாமல் புறப்பட்டுப்போ. இனிமேல் வியாபார மாவது இன்னும் பரபரப்பாகச் செய்து மிகுதியாகச்

சம்பாதிக்க வேண்டும். மாமா மனம் வைத்தால் அதற்கும் வழி செய்யலாம். அவருக்கே தெரியாதா? (பச்சையப்பர் கவலையோடு தண்டு இருந்த சத்திரத்திற்குப் போகிறார்.)

## காட்சி : 8

கி. பி. 1771

**இடம் :** பவுனி நாராயண பிள்ளை வீட்டுக் கூடம்.

**வேளை :** பவுனி நாராயண பிள்ளை சாப்பிட்டு வெற்றிலை பாக்குப் போட்டுக்கொள்கிற நேரம், பகல் 1 மணி.

**மாந்தர்:** பவுனி நாராயண பிள்ளை, பூச்சி அம்மாள்.

பவுனி : என்ன'ம்மா? என்ன செய்தி? எப்படி இருக்கிறான் பச்சையப்பன்?

பூச்சி : என்னவோ ஒரு வகையாய்ச் சோர்ந்தாற் போல் இருக்கிறான் அண்ணா! நீங்கள் தண்டியிலிருந்து அழைத்து வந்தீர்களே அன்றைக்கிருந்து அப்படியே சோர்வாகத்தான் இருக்கிறான்.

பவுனி : இருக்கட்டும். நல்ல பையன். அன்றைக்கு 'வாப்பா வீட்டுக்குப் போகலாம்' என்று கூப்பிட்டேன். குறுக்கே ஒரு சொல் பேசவில்லை. துரையிடத்தில் பேசி உத்தரவு பெற்றுக்கொண்டதும் பேசாமல் என் பின்னே வந்துகொண்டிருந்தான். தங்கமான பையன், புத்திசாலி, ஏதோ கெட்ட கிரகம், அப்படி புத்தி கொடுத்தது. அதனால் அங்கே போய்ச் சேர்ந்தான். நீ ஒன்றும் கடிந்து பேசாதே'ம்மா.

பூச்சி : நான் ஒன்றுமே சொல்லவில்லை அண்ணா! அவனே வருத்தமாக இருக்கும்போது நான் சொல்வேனா?

பவுனி : இருக்கட்டும், அவனுக்குத் தகுந்த ஏற்பாடு செய்யப்போகிறேன். (எழுந்து போய் வெற்றிலையைத் துப்புகிறார். அப்போது யாரோ ஆள் வந்து கடிதம் கொடுக்கிறான். அதை அவர் பெற்றுக்கொண்டு, படித்

துப் பார்த்து) அப்படியே வருவேன் என்று போய்த் துரைக்குச் சொல்லு.

பூச்சி : ஒன்றும் இல்லை அண்ணு ! இங்கே உங்களுக்குத் தெரிந்த இடத்தில், கும்பெனியிலாவது, ஒரு நல்ல தொழில் பார்த்துக் கொடுத்துவிடுங்கள். அதோடு அவனுக்குத் திருப்தி ஆகிவிடும்.

பவுனி : நேற்றிலிருந்தே நான் அதே முயற்சியாக இருக் கிறேன். இப்போது ஒருத்தன் கடிதம் கொண்டு வந்து கொடுத்தானே, அதுவும் இதைப் பற்றித்தான். நேற்றுப் பார்த்துவந்த துரைக்கு வேண்டியவர் ஒரு வர்க்குச் சொல்லிவிட்டு வந்தேன். அவர் நம்பிக்கை யாக எழுதியிருக்கிறார்.

பூச்சி : எப்படியாவது நல்ல இடமாகப் பார்த்துச் செய்யுங் கள் அண்ணு ! உங்களைத்தான் தெய்வம் போல நம்பி யிருக்கிறேன்.

பவுனி : நம் பையனுக்குச் செய்யாமல் வேறு யாருக்குச் செய்யப்போகிறேன் ? முன்னமே செய்திருக்க'ணும். செய்திருப்பேன். ஆனால் அவனுக்கு இன்னும் வயசு ஆகவில்லையே என்று பார்த்தேன். வயசு ஆகாவிட்டால் திறமை இருக்கிறது. பழகிவிட்டால் அவனே என்னை விடக் கெட்டிக்காரனாக இருக்கப்போகிறான், என்னை விட உயர்வாகப் பிழைக்கப்போகிறான். இந்த வயசிலே எனக்கு இவ்வளவு தெரியாதம்மா. உண்மையாய்ச் சொல்கிறேன். நான் துபாஷ் வேலை கற்றுக்கொண் டதே முப்பது வயசுக்கு மேலேதான். இவனுக்கு இப் போதுதானே பதினெட்டு வயசு ஆகிறது என்று பார்த்தேன். இருந்தாலும் இருக்கட்டும். (வீட்டுக்குள்

யாரோ தும்முகிற ஒலி கேட்கிறது.) யாரோ தும்மு கிறார்கள்.

பூச்சி : அண்ணிதான் அண்ணா, வேறு யாரும் இல்லை.

பவுனி : ஓ ஓ ! அவள் தும்மினால் எதுவும் பழுது ஆகாது. நல்லதுதான். பலமுறை பார்த்திருக்கிறேன்.

பூச்சி : ஒரு பையன் அண்ணா. உள்ளூரிலே இருக்கும் படியாக வேலை பார்த்துக்கொடுங்கள் அண்ணா.

பவுனி : உள்ளூரிலேயும் வேலை ; வெளியூருக்கும் கொஞ் சம் போக வேண்டும் அம்மா. துபாஷ் வேலைதான், நிக் கல்ஸ் துரை என்று ஒருவர் இருக்கிறார். அவர் தெற்கு மாவட்டங்களுக்குப் போய்ச் சரக்கு வாங்கிச் சீமைக்கு அனுப்புகிறவர். அவரிடத்தில் துபாஷ் வேலைதான். அதனால் பச்சையப்பனும் தெற்கு மாவட்டங்களுக்குப் போக வேண்டும். போனால்தானே சரக்கு வாங்கி அனுப்ப முடியும் ? அதைப் பற்றி உனக்குக் கவலை வேண்டாம்'மா. பச்சையப்பனை இன்னும் சின்ன குழந்தை என்று எண்ணிக்கொண்டிருக்கிறாய். அவன் திறமை இங்கே யாருக்கும் இல்லை. வெளியூர் வியா பாரத்தில் பழகிவிட்டால், அப்புறம் அவனை யாரும் வெல்ல முடியாது. இங்கிலீஷும் கொஞ்சம் பேசு கிறான். துரைகளிடத்தில் அது முக்கியமாக வேண் டும். அதுவும் இருக்கிறது அவனுக்கு.

(பூச்சி அம்மாள் அமைதியாக இருத்தல்)

பவுனி : இன்னும் ஒன்று'மா. அடுத்த சித்திரையில் அவ னுக்கு ஒரு கலியாணமும் செய்துவிட வேண்டும். அதிலே நமக்கு ஒரு முயற்சியும் இல்லை. வீட்டில் இருக்கிற பேர்த்தியை ஒரு நல்ல நாளில் நாலுபேர் முன்னிலையில் தாலிகட்ட வேண்டியதுதானே.

பூச்சி : (மகிழ்ச்சியோடு) செய்யுங்கள் அண்ணா. நான் போய் வருகிறேன்.

பவுனி : சரி அம்மா! நானும் அந்தத் துரையிடத்தில் போய் மறுபடியும் பேச வேண்டும்.

(பூச்சி அம்மாள் போகிறார். பவுனி எழுகிறார்.)

## காட்சி : 9

### கி. பி. 1774

**இடம் :** காஞ்சிபுரக் கோயில் கோபுரத்தின் கீழ்.

**வேளை :** மாலை.

**மாந்தர் :** வழிப்போக்கர் இருவர், புலவர் ஒருவர்.

வழிப்போக்கர் ஒருவர் : என்னய்யா ? கோயில் கோபுரத்தை அப்படி விழித்து விழித்துப் பார்க்கிறாயே ! இப்போதுதான் முதல்முறை பார்க்கிறாயோ ?

வழிப்போக்கர் மற்றொருவர் : சும்மா பார்த்தேன். உள்ளே கடைக்கால் போட்டிருப்பதைப் பார்த்தேன். அது நேற்று முந்தாநேற்றுப் போட்டது போல் இருக்கிறது. ஆனால் கோபுரத்தைப் பார்த்தால் அது எவ்வளவோ காலம் ஆனது போல் தெரிகிறதே.

முதல் ஆள் : அதை இப்போது புதிதாகக் கட்டப்போகிறார் ஒரு புண்ணியவான். போன வாரத்தில் கடைக்கால் போட்டார்.

இரண்டாம் ஆள் : அப்படியா ? இந்தக் காலத்திலும் அப்படிப்பட்ட புண்ணியவான்கள் இருக்கிறார்களா ? நம்ப முடியவில்லையே ? பழங்காலத்தில் இருந்த சோழ அரசர்களுக்குப் பிறகு, யாருமே பெரிய கோயில் கட்டியதில்லை என்று சொல்வார்கள்.

முதல் ஆள் : அது உண்மைதான். ஆனால் யாரோ கோடியில் ஒருத்தராக நல்லவர்கள் இப்போதும் பிறக்கிறார்கள். (வழியில் போய்க்கொண்டிருந்த புலவர் ஒருவர் இந்த வாக்கியத்தைக் கேட்டதும் அப்படியே திகைத்து மகிழ்ச்சியோடு நிற்கிறார்.)

புலவர் : என்னப்’பா இது! நான் என்ன நினைத்துக் கொண்டு வந்தேனோ, அதையே அப்படியே சொல்கிறாயே. யாரப்பா நீ?

முதல் ஆள் : நான் வழியே போகிற ஆள் அய்யா! பக்கத்தில் சிவரம் எங்கள் ஊர்.

புலவர் : நல்ல பேச்சு, சரியாகச் சொன்னாய். உன் வாயில் இனிக்க இனிக்கச் சர்க்கரை கொட்ட வேண்டும். கோடியில் ஒருத்தர்–நல்லவர்–இப்போதும் பிறக்கிறார். உண்மை அப்பா, உண்மை. இதோ இங்கே போன வாரத்தில் கும்பாபிஷேகம் நடத்தினார் ஒரு வள்ளல். மண்டபத்துக்கும் கடைக்கால் போட்டிருக்கிறார். அவரை நினைத்துக்கொண்டே வந்தேன். நீ சொன்னது அவருக்குத்தான் பொருந்தும் அப்பா. கோடியில் ஒருத்தர் நல்லவர் இப்போதும் பிறக்கிறார். அவரே அவரே தான்.

முதல் ஆள் : நானும் அவரைப் பற்றித்தான் சொல்லிக் கொண்டு வந்தேனுங்க.

புலவர் : அப்படியா? (அந்த ஆளை அப்படியே சேர்த்துத் தழுவிக்கொண்டார்.)

முதல் ஆள் : நான் துணி வெளுக்கிற ஆள் அய்யா. விட்டு விடுங்கள்; விட்டு விடுங்கள்.

புலவர் : (விட்டு விட்டு) அதைச் சொல்லாதே’ப்பா. இதே ஊரில் ஒரு காலத்தில் உன் தொழில் செய்கிற ஆளை அரசன் ஒருவன் பக்தியினால் அப்படியே சேர்த்துத் தழுவிக்கொண்டான் தெரியுமா? சேக்கிழார் அதை அழகாகப் பாடியிருக்கிறார். அன்புக்கு முன்னே இந்தச் சின்னஞ் சிறு வேறுபாடு நிற்குமா? நீ யாராக இருந்தால் என்ன? உன் வாயில் வந்த சொல் என்ன அருமையான சொல்! அதுதானே மந்திரம்?

முதல் ஆள் : *அப்படிச் சொல்லாதீர்கள் அய்யா. நான் ஏழை.*

இரண்டாம் ஆள் : *என்ன என்னவோ பேசுகிறீர்கள் ! எனக்கு ஒன்றுமே தெரியவில்லையே.*

புலவர் : *நீ யார் அப்பா ?*

இரண்டாம் ஆள் : *நான் செங்கல்பட்டு அய்யா. இங்கே ஒரு வேலையாக வந்தேன். அப்படியே கோயிலைப் பார்த்தேன்.*

புலவர் : *பார், பார். உள்ளே போய்ப் பார். புதிதாக இரண்டு சிலை வார்த்து வைத்திருக்கிறார். என்ன அழகான சிலை ! போய்ப் பார் : சிவகாமி அம்மை ஒன்று. பலிநாயகர் ஒன்று. இந்த ஊருக்கு வந்தால் கண்ணாலே பார்க்காமல் போகக் கூடாது. (உடனே முதல் ஆளைப் பார்த்து) ஆமாம், உனக்கு எப்படிப் பச்சையப்ப முதலியார் தெரியும் ?*

முதல் ஆள் : *எனக்குத் தெரியாதுங்க. அவர் யாருங்க பச்சையப்ப முதலியார் ?*

புலவர் : *அட என்னப்பா அது ? கோடியில் ஒருத்தர் நல்லவர் இப்போதும் பிறக்கிறார் என்று கொஞ்சம் முன்னே சொன்னாயே அப்பா. அவரைத்தான் உனக்கு எப்படித் தெரியும் என்று கேட்கிறேன்.*

முதல் ஆள் : *அவர் எனக்குத் தெரியாதுங்க.*

புலவர் : *கோடியில் ஒருத்தர் நல்லவர் பிறக்கிறார் என்று இப்போது சொன்னாயே அப்பா.*

முதல் ஆள் : *சும்மா சொன்னேனுங்க. எல்லாரும் சொல்வதைக் கேட்டு நானும் சொன்னேன்.*

புலவர் : *சரி, சரி.*

இரண்டாம் ஆள் : இங்கே மண்டபத்துக்கு யாரோ கடைக்கால் போட்டிருக்கிறார் என்று சொன்னாருங்க. அப்போது சொன்னாருங்க.

முதல் ஆள் : ஆமாங்க, ஆமாங்க.

புலவர் : அதைத்தான் நானும் கேட்கிறேன். அவர்தான் பச்சையப்ப முதலியார் என்பவர். உனக்குத் தெரியாதா ?

முதல் ஆள் : சத்தியமாகச் சொல்கிறேனுங்க. அவர் எனக்குத் தெரியாதுங்க.

புலவர் : போகட்டும். நான் சொல்கிறேன். அதையாவது கேட்டுத் தெரிந்துகொள்ளாமல் போகக் கூடாது. அவ்வளவு நல்லவர் அவர் ; அவ்வளவு பெரிய வள்ளல் அவர்.

இரண்டாம் ஆள் : அப்படியானால் நீங்கள் சொல்லுங்கள்.

முதல் ஆள் : சொல்லுங்கள்.

புலவர் : அவருடைய சொந்த ஊர் இதே காஞ்சிபுரம் தான்.

முதல் ஆள் : அப்படியானால் எனக்குத் தெரிந்திருக்குமே.

புலவர் : ஆனால் அவர் வெளியூரிலேயே பிறந்து வளர்ந்தவர். தகப்பனார் இறந்துபோய்விட்டார். தாயார் மிகவும் பாடுபட்டு அவரை வளர்த்தாராம். யாரோ ஒரு பெரிய துபாஷ் பட்டணத்தில் இருக்கிறாராம். அவரிடத்தில்தான் பச்சையப்ப முதலியாரும் துபாஷாகப் போய்ச் சேர்ந்து, இப்போது அவரைவிட நிறையப் பணம் சேர்த்திருக்கிறார்.

இரண்டாம் ஆள் : நீங்கள் பார்த்திருக்கிறீர்களா, அவரை ?

புலவர் : கண்ணாரப் பார்த்திருக்கிறேன். பட்டணத்தில் அவருடைய வீட்டிலேயே போய்ப் பார்த்திருக்கிறேன்.

புகழ்ந்து பாடியிருக்கிறேன். பரிசு பெற்றிருக்கிறேன். என்ன மலர்ந்த முகம்! என்ன அறிவான பார்வை! என்ன அன்பான ஆதரவு! என்ன இனிமையான பேச்சு! எவ்வளவு பெருந்தன்மை! எவ்வளவு பரந்த நோக்கம்! அரை நாழிகை நேரம்தான் பழகினேன். ஆனால் இன்னும் அந்தப் பழக்கத்தை மறக்க முடியவில்லை. பிறவியிலேயே அவருக்குப் பெருந்தன்மை அமைந்திருக்கிறது. காஞ்சிபுரத்துக்கே அவரால் ஒரு பெருமைதான். பட்டணத்தில் என்ன சொல்கிறார்கள், தெரியுமா? காஞ்சிபுரம் பச்சையப்ப முதலியார் என்றுதான் சொல்கிறார்கள்.

முதல் ஆள் : அப்படி இருந்தும் நான் இதுவரையில் கேள்விப்பட்டதில்லையே.

இரண்டாம் ஆள் : அப்புறம் சொல்லுங்கள்.

புலவர் : கும்பெனியில் வெள்ளைக்கார துரைகளிடத்தில் அவருக்கு நல்ல பேர். நவாபு இடத்தில் நல்ல பேர். இப்படியே இந்த வயதிலேயே எவ்வளவோ நல்ல பெயரும் புகழும் பெற்றிருக்கிறார். ஏழை எளியவர்கள் எல்லாரும் இவரை வள்ளல் என்று வாயார வாழ்த்துகிறார்கள். இவர் மட்டும் நூறு வயசு நிரம்பி இந்த மண்ணுலகத்தில் வாழ்வாரானால், இதுவரையில் வாழ்ந்த வள்ளல்களின் பேர் எல்லாம் மறைந்துபோகும். இவருடைய பேரும் புகழும்தான் உலகத்தில் நிற்கும்.

இரண்டாம் ஆள் : நல்லவர்கள் எங்கே நூறு வயசு இருக்கிறார்கள்? நம்மைப் போல் உதவாத கட்டைகள் தான் நூறு வயசு இருந்து தொல்லைப்பட வேண்டியிருக்கிறது.

முதல் ஆள் : பச்சைப்ப முதலியாருக்கு இப்போது என்ன வயசு'ங்க ?

புலவர் : இருபது வயதுதான். இளம் பிள்ளைதான். எப்படிப் பிழைப்பது என்றே தெரியாமல் எல்லாரும் திண்டாடுகிற வயது இது. ஆனால் பச்சையப்ப முதலியார் இந்த வயதிலேயே பணம் சேர்க்கக் கற்றுக் கொண்டார் ; வாரி வாரிக் கொடுத்து ஏழைகளைக் காப்பாற்றுகிறார் ; கோயில் குளத்துக்கு நல்ல தான தருமம் செய்கிறார் ; நாடெல்லாம் நல்ல பெயர் எடுத்து விளங்குகிறார்.

முதல் ஆள் : புண்ணியவான். நூறு வயசு நல்லபடி வாழ னும். (வானத்தை நோக்கிக் கண்ணை மூடிக் கை கூப்புகிறார்.)

புலவர் : போன வாரம்தான் திருமணமும் நடந்தது.

முதல் ஆள் : அப்படியா ?

புலவர் : வயது இருபதுதானே. சின்ன பிள்ளைதான். ஆனால் அவருடைய அனுபவம் அறிவு பெருந்தன்மை எல்லாம் என்ன என்று சொல்ல முடியும் ? திருமணம் செய்துகொள்ளும் இளம்பிள்ளைகள் எல்லாவற்றையும் மறந்துவிட்டுக் காமுகராய் நடந்துகொள்கிறார்கள். ஆனால் பச்சையப்ப முதலியார் என்ன செய்தார் தெரியுமா ? திருமணம் நடந்த அதே நாளில் இங்கே இரண்டு சிலை செய்துவைத்து, கும்பாபிஷேகமும் சிறப்பாக நடத்திவைத்தார். இந்த நல்லெண்ணம் இந்த இளவயதில் யாருக்கு வரும் ? அது மட்டுமா ?

இரண்டாம் ஆள் : பிறப்பே ஏதோ தெய்வப் பிறப்பாக இருக்கும் போல் தெரிகிறது !

புலவர் : நாள்தோறும் திருவாசகம், தேவாரம், திருவிசைப்பா,. திருப்பல்லாண்டு ஓதும்படியாகக் கேட்

கிறார். ஓதுவார்களை வைத்துப் பாடும்படி செய்கிறார். தாமும் பாடுகிறார். நாயன்மார்களின் திருநாளை எல்லாம் கொண்டாடுகிறார். என்னைப் போல் போகிற புலவர்க்கெல்லாம் இன்சொல் கூறி வரவேற்பு அளிக்கிறார்; பரிசு வழங்குகிறார்.

இரண்டாம் ஆள் : உங்களுக்கு ஏதாவது கொடுத்தாரா?

புலவர் : அதைத்தான் இந்நேரமும் சொல்லிவந்தேன். நான் சொல்வது இங்கிலீஷா? தமிழ்தானே?

இரண்டாம் ஆள் : நீங்கள் சொன்னது தெரியவில்லை அய்யா. அதனால் கேட்டேன்.

புலவர் : எனக்கும் பரிசு வழங்கினார். பத்து வராகன் கையால் அள்ளிக் கொடுத்தார். இதோ இந்தச் சரிகைக் கரை போட்ட வேட்டியும் அவர் தருமம்தான். நானும் ஒரு கவி பாடினேன். அதைச் சொல்கிறேன் கேள்.

முதல் ஆள் : சொல்லுங்கள்.

புலவர் :

அண்ணல்அருட் கடல்படிந்தோம்; ஆழ்கடலைக்
குடித்துவந்தோம்; அரிய சீரே
நண்ணுதமிழ்க் கடல்கடந்தோம்; காஞ்சிநகர்ப்
பச்சையப்ப நகுலன் ஈட்டும்
எண்ணுபுகழ்க் கடலெங்கும் பரந்ததிதை
அளவிடவும் ஏலாது என்னக்
கண்ணிஅகத் தியமுனிபோய்க் குன்றேறி
இருந்தனனால் கவலை கொண்டே.

அதாவது அகத்திய முனிவர் இருக்கிறாரே அவர்.

முதல் ஆள் : அவர்கூட எனக்குத் தெரியாதுங்க.

புலவர் : சும்மா கேள், சொல்கிறேன்.

முதல் ஆள் : சொல்லுங்கள் அய்யா.

புலவர் : அதாவது : அகத்திய முனிவர் இருக்கிறாரே, அவர் மூன்று பெரிய கடலில் பழக்கமானவர். முதலாவது அவர் சிவபக்தி நிரம்பியவர் ; அதனால் சிவ பெருமானுடைய திருவருளாகிய கடலில் படிந்து பழகி விட்டார். இரண்டாவதாக : நம்முடைய தாய்மொழி யாகிய தமிழ் இருக்கிறதே, அது பெரிய கடல் போன்றது. தமிழை நன்றாகப் படித்த அகத்தியர் அந்தத் தமிழ்க் கடலையும் கடந்துவிட்டார்.

இரண்டாம் ஆள் : இன்னொரு கடல் சொல்லாமல் விட்டு விட்டீர்களே.

புலவர் : பொறு, பொறுத்துக் கேள். மூன்றாவது கடல் தான் நாம் பார்க்கிற உப்புக்கடல்.

முதல் ஆள் : நான் பார்த்தது இல்லேங்க.

புலவர் : போகட்டும், கேள். அந்த உப்புக் கடலையும் அகத்தியர் குடித்துவிட்டார். எப்படிக் குடித்தார் தெரியுமா ? கடலே அப்படியே எடுத்து உள்ளங்கையில் வைத்து—

இரண்டாம் ஆள் : ஆ ! ஆ ! எப்படிங்க. (அப்படியே திணறி விழிக்கிறான்.)

முதல் ஆள் : ஆள் பெரிய ஆளாக இருக்கணும்.

புலவர் : அடடா ! சொல்கிறேன் கேளப்பா. ஆள் நம் கட்டைவிரல் அவ்வளவுதான்.

இரண்டாம் ஆள் : என்னங்க இது ? எப்படிங்க இது ?

புலவர் : உங்களுக்கு என்ன தெரியும் ? பேசாமல் கேளுங்கள், சொல்கிறேன். அந்தக் கடலே அப்படியே எடுத்து உள்ளங்கையில் வைத்துக் குடித்துவிட்டார்.

இரண்டாம் ஆள் : கடலேயா ? குடித்துவிட்டாரா ? என்னய்யா, அதிசயமாக இருக்கிறதே ! கேள்விப்பட்டதில்லேயே.

புலவர் : உங்களுக்கு எப்படித் தெரியும்? பல நூல்களைப் படித்த எங்களுக்குத்தான் தெரியும்.

முதல் ஆள் : ஆமாம் ஆமாம். எங்களுக்குக் கையெழுத்துப் போடவே தெரியாது.

புலவர் : சொல்கிறேன் கேளுங்கள். அப்படி மூன்று கடலில் பழகிய அந்த அகத்தியர் பச்சையப்பருடைய புகழாகிய கடல் தமக்கு அடங்காது என்று தெரிந்து கொண்டார். அவருடைய புகழ்க்கடல் எல்லா இடங்களிலும் உலகமெல்லாம் பரந்து வருவதைப் பார்த்தார் அகத்தியர். பயந்துபோனார். இந்தக் கடலில் நாம் ஒன்றும் செய்ய முடியாது. இது நம்மையும் விழுங்கி விடும் என்று பயந்தார். உயரமான இடத்தில் ஏறிக் கொண்டால் இந்தக் கடலிலிருந்து தப்பித்துக்கொள்ளலாம் என்று எண்ணினார். பேசாமல் போய்ப் பொதிய மலையில் ஏறி உட்கார்ந்து கவலை கொண்டார்.

இரண்டாம் ஆள் : நீங்கள் மலைக்குப் போய் அவரைப் பார்த்திருப்பீர்கள்.

புலவர் : சரிதான். உங்களுக்குச் சொல்வதைவிட ஊமையாகவே இருக்கலாம்.

(போய்க்கொண்டே இருக்கிறார்.)

முதல் ஆள் : எவ்வளவு படித்திருக்கிறார்!

இரண்டாம் ஆள் : எவ்வளவோ பேசுகிறார்! தங்கு தடை இல்லாமல் சொல் வருகிறது. என்னென்னவோ சொல்கிறார்!

முதல் ஆள் : அவர் சொன்னதில் எவ்வளவோ நமக்குத்

இரண்டாம் ஆள் : அதிலிருந்தே அவர் எவ்வளவு படித்தவர் என்று தெளிவாகத் தெரிகிறது.

முதல் ஆள் : அவர் சொல்லாவிட்டால் நமக்குப் பச்சையப்ப முதலியாரைப் பற்றி ஒன்றுமே தெரிந்திருக்காது. மெய்தான். போய் வரட்டுமா ?

இரண்டாம் ஆள் : புண்ணியவான். நன்றாக வாழ்’ணும். போய் வாங்கள். நானும் வருகிறேன்.

## காட்சி : 10

### கி. பி. 1783

இடம் : *பூவிருந்தவல்லியில் ஒரு பெரிய வீடு. கூடத்தில் சோபா. எதிரே சாய்வுப்பலகை. பக்கத்தில் இரண்டு பெஞ்சுகள். அவற்றில் அடுக்கடுக்கான கணக்குப் புத்த கங்கள்.*

வேளை : *காலை 10 மணி.*

மாந்தர் : *பச்சையப்ப முதலியாருடைய கணக்குப்பிள்ளை, தர்மராய முதலியார், புங்கத்தூர் செங்கல்வராய முதலி யார்.*

*பிறகு பச்சையப்ப முதலியார் வருதல்.*

தர்மராய முதலியார் : *இன்னும் முதலியார் வரவில்லையே !*

செங்கல்வராய முதலியார் : *எத்தனையோ வேலை அவருக்கு. பட்டணத்தில் போய்ப் பார்த்தால், நிற்க நேரமே இல்லை. விடியற்காலையில் எழுகிறார். இரவு பதினொரு மணி பன்னிரண்டு மணிக்குத்தான் படுக்கைக்குப் போகிறார். ஓயாத வேலை. எந்த நேரம் பார்த்தாலும், "பச்சையப்ப முதலியார் இருக்கிறாரா, பச்சையப்ப முதலியார் இருக்கிறாரா" என்று யாராவது தேடிக் கொண்டு வந்தபடியே இருக்கிறார்கள்.*

கணக்குப்பிள்ளை : *இத்தனை வேலைக்கும் இடையில் பூந்த மல்லிக் கணக்கு, திருப்பாசூர்க் கணக்கு எல்லாம் எப் படியோ தவறாமல் நினைவில் வைத்துக்கொண்டிருக் கிறார். அதுதான் அவரால் எப்படி முடிகிறதோ, தெரியவில்லை. நான் அதே வேலையாக உட்கார்ந்து இரவும் பகலும் கணக்கு எழுதிக்கொண்டிருக்கிறேன். ஆனாலும் மறந்துபோகிறேன். அவர் மறப்பதே இல்லை.*

சேங்கல்வ : ஆமாம், ஆமாம். போன மாதத்திலே எங்கள் ஏரியின் கீழே இவ்வளவு கலம் நெல் கிடைத்தது என்று எனக்குத் தெரியாது. அவரைக் கனவிலே எழுப்பிக் கேட்டாலும், சட்டென்று சொல்லிவிடுகிறார். அவ்வளவு நினைவு.

தர்ம : இல்லாவிட்டால் இவ்வளவு பெரிய வேலைகளை— ஒன்று இரண்டா இத்தனை வேலைகளை—கவனிக்க முடியுமா ? ஒரு மனிதரால் ஆகிற வேலையா இது ? அப்பப்பா !

சேங்கல்வ : துபாஷ் வேலை ஒன்றைச் செய்வதற்கே எல்லாத் துபாஷ்களும் தடுமாறித் திணறுகிறார்கள். முதலியாருக்கு ஏழெட்டுத் துபாஷ் வேலை கொடுத்தாலும் செய்வார் போல் இருக்கிறது. நாம் எல்லாம் எந்த மூலைக்கு ?

தர்ம : அதெல்லாம் இருக்கட்டும். முதலியார் அரச குடும்பத்தில் பிறந்திருக்க வேண்டியவர். தவறிப்போய் ஓர் ஏழைக் குடும்பத்தில் பிறந்துவிட்டார். பணம் வந்து சேர்கிறது, புகழ் வந்து சேர்கிறது என்று அதற்காக மட்டும் அப்படிச் சொல்லவில்லை. உள்ளபடியே சொல்கிறேன். அரசாங்கம் செய்ய வேண்டிய வேலையை அல்லவா அவர் செய்கிறார் ? ஒரு பக்கம் கும்பெனி வெள்ளைக்காரருக்கு உதவியாக இருக்கிறார். பூந்தமல்லி, திருப்பாசூர்ப் பகுதிகளுக்கு வரிவசூல் செய்து கொடுப்பது என்றால், நவாபாலும் முடியாமல் விட்டுவிட்ட வேலை அல்லவா இது ? குடிகளிடத்தில் போய் வரி கேட்பது என்றால், அரசபிறப்பாக இருந்தால்தான் இது முடியும்.

கணக்குப் : அது போகட்டும். நவாபு ஆட்களுக்கு அய்யாதானே மாதம் மாதம் சம்பளம் கொடுக்கிறார் !

தா்ம : குடியானவா்களிடத்தில் வரி வாங்க முடியாமல் நவாபும் விட்டுவிட்டார் ; இன்னும் எத்தனையோ பேர் பாட்டு எழுதிக் கொடுத்தார்கள். எல்லாம் அரைகுறை யாக விட்டவா்கள்தானே? இவா் ஒருவா்தான் மூச்சைப் பிடித்து நடத்தி, ஒரு பக்கம் கும்பெனிக்காரருக்கும் பணம் தருகிறார் ; மற்றொரு பக்கம் நவாபுக்கும் உதவி யாக இருக்கிறார். அப்பப்பா, யாரால் முடியும் ? நினைத் தாலே பயமாக இருக்கிறது.

கணக்குப் : அன்றைக்கு நவாபுஇடத்திலிருந்து அதிகாரி ஒருவா் வந்திருந்தார். பச்சையப்ப முதலியார் இல்லா திருந்தால், இந்நேரம் கும்பெனிக்கும் நவாபுக்கும் பெரிய போர் ஏற்பட்டு, செங்கல்பட்டு ஜாகீர் என் னவோ ஆயிருக்கும் என்று சொன்னார். ‘ எல்லாம் பச்சையப்ப முதலியார் இருக்கிறார், பார்த்துக்கொள் வார் ’ என்று எதற்கு எடுத்தாலும் நவாபு இவா்மேல் நம்பிக்கையாகச் சொல்கிறாராம்.

செங்கல்வ : ஏன் ? கும்பெனிக்காரரும் அப்படித்தான். முதலியாரைக் கேட்காமல் அவா்கள் எதையும் செய்வதில்லையே. இது மட்டும் அல்ல. போன வெள்ளிக்கிழமை பெரிய இடத்துச் செய்தி ஒன்று கேள்விப்பட்டேன்.

தா்ம : என்ன அது ?

செங்கல்வ : தஞ்சாவூா் அரசருடைய தா்பாரே ஆட்டம் கொடுத்துப் போயிருக்கிறதாம். அங்கே போயிருக்கும் படியும் அரசரிடமிருந்து கடன்தொகையை வசூல் செய்து கொடுக்கும்படியும் கும்பெனிக்காரர் முன் னமே கேட்டிருந்தார்கள் அல்லவா ?

தா்ம : அது தெரியும்.

சேங்கல்வ : முதலியார் அதற்கு அப்போது ஒத்துக் கொள்ளவில்லை. இப்போது கும்பெனிக்காரருக்கு வேறு வழி இல்லை. தஞ்சாவூர் அரசரும் இவரையே விரும்புகிறார். அங்கே இருக்கும் சலிவன்துரையும் பச்சையப்பர் வந்தால் நிலைமை சரியாகும் என்று கும்பெனிக்கு எழுதியிருக்கிறாராம். தவிர, எப்படியாவது மைசூரில் திப்பு சுல்தான் கொட்டத்தை அடக்க வேண்டும் என்று கும்பெனிக்காரர் திட்டம் போட்டிருக்கிறார்கள். அதற்கும் பச்சையப்ப முதலியாருடைய உதவி வேண்டும் என்று தஞ்சாவூரிலிருந்து கும்பெனியாரைக் கேட்டிருக்கிறார்களாம்.

தர்ம : ஆமாம். நவாபுக்கும் தஞ்சாவூர் அரசருக்கும் ஆகாதே. தஞ்சாவூரைத் தன்வசப் படுத்திக்கொள்ள வேண்டும் என்று நவாபு முன்னமே என்னவோ பாடு பட்டாராமே.

சேங்கல்வ : கும்பெனிக்காரர் ஏமாந்தவர்களா ? இவர்கள் தஞ்சாவூரை விடுவார்களா ? அதற்குத்தான் கும்பெனிக்கும் தஞ்சாவூர் தர்பாருக்கும் ஏராளமான ஒப்பந்தங்கள் ஏற்பட்டு ஒழுங்கு செய்திருக்கிறார்களாம். அந்த ஒப்பந்தங்களின்படி, எல்லாம் சரியாக நடப்பதற்கு முதலியார் அங்கே இருந்தால்தான் முடியும் என்று கும்பெனிக்காரர் எண்ணுகிறார்கள். தஞ்சாவூர் அரசரும் இவர் வந்தால்தான் தமக்கு நன்மையாக இருக்கும் என்று நம்புகிறாராம். நவாபும் இவர் போனால்தான் நல்லது என்று விரும்புகிறாராம்.

தர்ம : வேடிக்கையாக இருக்கிறதே. இத்தனை பேருக்கும் நடுவில் அகப்பட்டுக்கொண்டு முதலியார் என்ன செய்வார் ? எவ்வளவு தொல்லை !

சேங்கல்வ : அதுதான் அவருடைய திறமை. வியாபாரிக்கு வியாபாரியாக இருக்கிறார். அரசருக்கு அரசராக இருக்கிறார். தளபதிக்குத் தளபதியாக இருக்கிறார். அமைச்சருக்கு அமைச்சராக இருக்கிறார்.

தர்ம : நம்மைப் போல் நண்பருக்கு நண்பராகவும் இருக்கிறார்.

கணக்குப் : அன்பர்க்கு அன்பராகவும் இருக்கிறார். அடியார்க்கு அடியாராகவும் இருக்கிறார். அதை ஏன் விட்டுவிட்டீர்கள் ?

சேங்கல்வ : அப்பப்பா ! சாதாரண மனிதனால் முடியாது, முடியாது.

கணக்குப் : திப்புசுல்தான்கூட, இவரைப் பற்றிக் கேள்விப் பட்டால், இனிமேல் இந்தப் பக்கம் படையெடுக்கும் வேலைக்கே வர மாட்டார்.

சேங்கல்வ : அதற்கு என்ன சந்தேகம்? அதற்காகத்தானே இவர் தஞ்சாவூர்க்கு வர வேண்டும் என்று அங்கே உள்ளவர்கள் கேட்கிறார்கள் ?

கணக்குப் : ஆமாம், அங்கே போனால் துபாஷ் வேலை என்ன ஆவது ?

தர்ம : பட்டணத்துத் துபாஷ் வேலையை விட்டுவிட வேண்டியதுதான். தஞ்சாவூரில் மகாராஜாவுக்குத் துபாஷ் ஏஜண்ட் எல்லா உத்தியோகமும் செய்ய வேண்டியது தான். குடும்பமே இனிமேல் தஞ்சாவூருக்குப் போக வேண்டியதுதான்.

சேங்கல்வ : பட்டணத்துத் துபாஷ் வேலையைவிட அதில் நல்ல வரும்படி அல்லவா ? லட்சம் லட்சமாகச் சம்பாதிப்பார். மகாராஜாவுக்கே கடன் கொடுக்கக் கூடிய நிலைமை வந்துவிடும்.

கணக்குப் : அதோ வண்டி வருகிறது. அய்யா வந்துவிட்டார்.

செங்கல்வ : (அடங்கிய குரலில்) நாம் பேசியது எல்லாம் நமக்குள்ளே இருக்கட்டும். வெளியே விடக் கூடாது. பெரிய இடத்து ரகசியங்கள்.

தர்ம : நல்லது. எனக்குத் தெரியாதா ?

(பச்சையப்ப முதலியார் வண்டியை விட்டு இறங்கி உள்ளே வருகிறார். தர்மராய முதலியாரும் செங்கல்வ ராய முதலியாரும் ஒதுங்கி நிற்கிறார்கள். கணக்குப் பிள்ளை கைகட்டி நிற்கிறார். பச்சையப்ப முதலியார் வந்து உட்காருகிறார்.)

பச்சை : என்ன தர்மராயர் ! எப்படி ? எல்லாரும் சுகமா ? செங்கல்வராய முதலியார் ! ஊரிலே மழைமாரி எப்படி இருக்கிறது. உட்காருங்கள், உட்காருங்கள்.

தர்ம : } எல்லாரும் சுகம்தானுங்க.
செங்கல் : } எல்லாம் நல்லதுதானுங்க.

(உட்காருகிறார்கள்.)

பச்சை : கணக்குப்பிள்ளை ! எப்படி இருக்கிறது வசூல் ? சம்பள நாள் நெருங்கிவிட்டது. கும்பெனிச் சிப்பாய் களுக்கும் சம்பளம் தர வேண்டும். நவாபு ஆட்களுக் கும் சம்பளம் தர வேண்டும். மாமா பவுனிபிள்ளைக்கு ஏதாவது உண்டி அனுப்ப முடியுமா ? எதோ கணக்கு, பார்க்கலாம்.

(கணக்குப்பிள்ளை பேரேட்டைத் திறந்து சாய்வுப்பல கையில் வைத்துக் காட்டுகிறார்.)

(முதலியார் அதைப் பார்க்காமலே தர்மராயரைப் பார்த் துப் பேசுகிறார்.)

பச்சை : எவ்வளவு பாண்டுகளுக்குப் பணம் வந்தது ? அந்த வகையில் இருப்பு எவ்வளவு ? ஒரு முப்பதி னுயிரமாவது தேறுமா ?

தர்ம : தேறும் ! இந்த வாரம் எவ்வளவோ மேல்.

பச்சை : *அப்படியா ? நல்லது. (கணக்குப் புத்தகத்தைப் பார்க்கிருர்.) இது சரி. திருப்பாசூர்க் கணக்கைத் தனியே எழுதியிருக்கிருயே அதை எடு. பார்க்கலாம். (கணக்குப்பிள்ளை அடுக்கான புத்தகங்களில் தேடு கிருர்.) (செங்கல்வராய முதலியாரைப் பார்த்து) நெல் எத்தனை கலம் இருப்பு ?*

செங்கல்வ : *மூவாயிரம் கலம் இருப்பு இருக்கிறது. இந்த மாதத்தில் இன்னும் இரண்டாயிரம் கலம் கிடைக் கும்.*

பச்சை : *கும்பெனியோடு நெல் ஒப்பந்தம் மொத்தமாகச் செய்துகொண்டது பெரிய தொல்லையாகப் போய்விட் டது. என்னவோ அரைகுறையாக மழை பெய்தது. அதனுல் இவ்வளவாவது கிடைக்கிறது. இல்லையானல், ஒப்பந்தப்படி கொடுக்க முடியாமல் போயிருக்குமே. பேர் கெட்டுப்போயிருக்குமே.*

கணக்குப் : *நீங்கள் வந்து ஒப்பந்தம் செய்வதற்கு முன்னே மழையே இவ்வளவு பெய்ததில்லையாம். பெரிய துன்ப மாம் குடியானவர்களுக்கு. நீங்கள் வந்தபிறகு, நீங்கள் காலடி வைத்தபிறகு, வெள்ளாமை குறைவே இல்லை என்று குடியானவர்கள் பேசிக்கொள்கிருர்கள்.*

பச்சை : *அதெல்லாம் நம் செயலா ? கடவுள் செயல். என்னவோ, நாம் நடப்பது நேர்மையாக நடக்கலாம். வஞ்சனை சூது வேண்டாம். நடப்பது நடக்கட்டும். (கணக்குப்பிள்ளை கணக்கை எடுத்துக் காட்டுகிருர் ; பச்சையப்பர் பார்க்கிருர்).*

*சரி. அந்தத் தெய்வசிகாமணி நாயகர் வரி அநியாயம் என்று தகராறு சொன்னுர். பட்டணத்துக்கே வந்து என்னிடம் சொன்னுர்.*

கணக்குப் : *பார்த்துச் சொல்கிறேனுங்க.*

பச்சை : பார்ப்பது என்ன ? நூற்று முப்பத்திரண்டு வராகன் அவர் தர வேண்டும். தொண்ணூருகக் குறைத்துக்கொள்ள வேண்டும் என்று மன்ருடுகிருர். தர்ம ராயரை அழைத்துக்கொண்டு போய் அந்த நிலங்களைப் பார்த்துவிட்டு வந்து சொல். நியாயமாக இருந்தால் குறைக்க வேண்டும் என்று நவாபுக்கும் எழுதுவோம், கும்பெனிக்கும் தெரியப்படுத்துவோம். அநியாயமாக ஏன் அந்த ஆளிடம் மிகுதியாகப் பணம் வாங்க வேண்டும் ? அப்படி அநியாயமாக வாங்கிக் கும்பெனிக்காரரிடத்தில் சேர்ப்பது நமக்குத் தகுமா ?

கணக்குப் : சரி'ங்கோ.

பச்சை : (செங்கல்வராய முதலியாரைப் பார்த்து) நீங்கள் என்னேடு வாங்க. களஞ்சியத்தைப் போய்ப் பார்த்து விட்டு வருவோம். அப்படியே சத்திரத்தில் குடியானவர்கள் வந்து கூடியிருக்கிருர்கள். அவர்களுடைய குறைகளையும் கேட்டுவரலாம். நம்மால் முடிந்ததை வஞ்சனை இல்லாமல் செய்யலாம். (தர்மராயரைப் பார்த்து) வராகன் இருப்பு எவ்வளவு என்று பெட்டியைத் திறந்து எண்ணிப் பாருங்கள். அந்த முப்பதினயிரத்தையும் தனியே கட்டுக் கட்டி வையுங்கள். இதோ போய் வந்துவிடுகிறேம்.

(பச்சையப்பர் எழுந்து போதல். செங்கல்வராய முதலியார் பின்தொடர்தல். மற்றவர்கள் இருவரும் வழிவிடுவதற்காகத் தொடர்ந்து போதல்.)

## காட்சி : 11

### கி. பி. 1789

**இடம் :** தஞ்சாவூரில் பெரியவீடு. பெரிய கூடம்.
**வேளை :** இரவு 8 மணி.
**மாந்தர் :** பச்சையப்ப முதலியார் (தலைப்பாகை இல்லாமல்), தேவாரம் பாடும் ஓதுவார்கள், பெரிய புராணப் பிரசங்கம் செய்யும் புலவர் ஒருவர், சோதிடர் பிறகு.

(முத்திநெறி அறியாத மூர்க்கரொடு...என்ற திருவாசகத்தைப் பாடிக்கொண்டே இருக்கும்போது திரை நீங்கல். பச்சையப்ப முதலியார் கண்ணை மூடிக் கேட்டு உருகிக் கொண்டிருக்கிறார். பாட்டு முடிகிறது.)

பச்சையப்பர் : (கண் விழித்து) திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார். என்ன உண்மை! என்ன உருக்கம் இந்தப் பாட்டில்! (சிறிது அமைதி) சரி. அந்தத் திருவையாற்றுப் பதிகம் - ஞானசம்பந்தர் பாடியது - ' புலனைந்தும் பொறி கலங்கி ' - பாடுங்கள்.

ஓதுவார் : பாடுகிறார் :—

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு ஐமேல் உந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்று
அருள்செய்வான் அமரும் கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழைஎன்று அஞ்சி
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவை யாறே.

பச்சை : திருவிசைப்பா ஒன்று பாடுங்கள்.

ஓதுவார் : பாடுகிறார் :—

ஒளிவளர் விளக்கே உலப்பிலா ஒன்றே
உணர்வுசூழ் கடந்ததோர் உணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்கும் தேனே
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே
அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

(சோதிடர் அமைதியாக வந்து கூடத்தில் உட்காருகிறார்.)

பச்சை : (அவரைப் பார்த்து) அடே! சோதிடர் எங்கே இந்நேரத்துக்கு வந்தார்!

சோதிடர் : சும்மா வந்தேன். ஓதுவார் வந்திருப்பார். தேவாரம் நடக்கும் என்று தெரியும். அப்படியே உங்களையும் பார்த்து ஒன்று பேச வேண்டும். பிறகு பேசலாம்.

பச்சை : ஏதாவது கெட்ட கிரகம் இது அது என்று சொல்லிவிட்டுப் போய்விடாதே அய்யா. அப்புறம் பாழும் மனத்தில் அதே கவலையாகிவிடுகிறது. அன்றைக்கு அப்படித்தான், ஏதோ உடல் நலிவு ஏற்படும் என்று சொல்லிவிட்டுப் போனாய். அதன்பிறகு அதே கவலை. உடம்பு என்று ஒன்று இருப்பதாக எண்ணுவதற்கே நேரம் இல்லாத வாழ்க்கை என் வாழ்க்கை. இப்போது அடிக்கடி உடம்பே நினைவுக்கு வருகிறது. உடம்பும் முன் போல் நல்லபடி இல்லாததாக எண்ணம் ஏற்படுகிறது. பேசாமல் ஈசனை நம்பி, வருவது வரட்டும் என்று இருந்துவிடுவதே நல்லது அய்யா.

சோதிடர் : இப்போது சொல்லப்போவது நல்லதுங்க. கெட்டது ஒன்றுமே இல்லை. நேற்று எப்படியோ என் கணக்கில் அகப்படாமல் தப்பிவிட்டது. வீட்டுக்குப் போன பிறகுதான் அது எனக்குப் பட்டது. உத்தரவு ஆனால் சொல்கிறேன்.

பச்சை : சரி, சொல்லு. சிவ பூசையில் கரடி புகுந்தது போல நல்ல வேளையிலே வந்தாயே அய்யா.

சோதிடர் : அப்படியானால் நாளைக் காலையிலே வருவேனுங்க. (எழுகிறார்.)

பச்சை : அது வேண்டாம். உட்காரு, உட்காரு. சொல்லி விட்டுப் போய்விடு. அது வேறு உனக்கும் குறையாக இருக்கும். சோதிடருக்கு மனவருத்தம் உண்டாக்கி விட்டேனே என்று எனக்கும் கவலையாய்ப் போய் விடும். சொல்லிவிட்டுப் போய்விட்டால் முடிந்தாற் போல் இருக்கும். அப்புறம் தேவாரம் கேட்டுவிட்டுப் போய்த் தூங்கிவிடுவேன்.

சோதிடர் : (உட்கார்ந்து) : அய்யா அவர்களின் ஜாதகம் சாதாரணமானது அல்ல. நானும் என்னுடைய வயதிற்குள் எத்தனையோ குறிப்பைப் பார்த்திருக்கிறேன். ஆனால் குருபலன் இப்படிப் பல முகமாய்ப் பல சிறப்போடு விளங்குகிற ஜாதகத்தைப் பார்த்ததில்லை. இதோ பாருங்கள், வீட்டுக்குப் போய்த் திரும்பப் பார்த்தபோதுதான் கண்டு பிடித்தேன். குருபலன் என்ன ஆச்சரியமாய் அமைந்திருக்கிறது. ஏழாம் இடத்தானுடைய திசாபுத்தி மிக மிகச் சிறப்பாக இருக்கிறது. குரு ஏழாம் இடத்தைப் பார்க்கிறார் ; சுக்கிரனைப் பார்க்கிறார். கட்டாயம் முகூர்த்தம் கூடப் போகிறது ; அதனால் உங்களுக்குக் கூடிய சீக்கிரத்

தில் - இந்த ஆனி மாதத்துக்குள்ளேயே - இன்னொரு விவாகம் கூடுகிறது.

பச்சை : என்னய்யா அது? அப்படியானால், அய்யாளுக்கு ஏதாவது—

சோதிடர் : அந்த அம்மாவுக்கு ஒரு குறைவும் இல்லேங்க. அவர்களுடைய ஆயுசில் கண்டமே இல்லே. அதையும் நன்றாகப் பார்த்துவிட்டேன். ஆனால் முதல் அம்மாவுக்குச் சந்தான விருத்தி இல்லே. இரண்டாவதாக வரப் போகிற அம்மாவுக்குச் சந்தான பாக்கியம் உண்டு'ங்க. அதற்காகத்தான் கடவுள் இப்படி அமைத்திருக்கிறார்.

பச்சை : இதென்ன அய்யா தொல்லே! தெரிந்தும் தெரிந்தும் நான் ஏன் இந்தத் தொல்லேயில் அகப்பட்டுக் கொள்ள வேண்டும்? இரண்டு பெண்டாட்டிக்காரன் திண்டாட்டம் என்று சொல்வது தெரிந்த கதைதானே.

புலவர் : இருந்தாலும் குழந்தை ஒரு பாக்கியம் அல்லவா? அது வேண்டுங்களே.

மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு

என்று திருவள்ளுவரும் சொல்கிறார்.

பச்சை : அப்படிச் சொன்ன திருவள்ளுவருக்கே குழந்தை இல்லேயாமே.

சோதிடர் : அது வேறு. அவருடைய கிரகம் அது. உங்களுக்கு எல்லா ஐசுவரியமும் கூடிவந்து நிறைந்திருப்பதுபோல, இதுவும் வந்து சேர்கிறது.

பச்சை : ஒன்றும் வேண்டாம் அய்யா! எனக்கு என்ன குறைவு! ஒரு கவலேயும் இல்லாமல் குடும்பம் நடக்கிறது. இப்படியே இருந்தால் போதும். பிள்ளே இருந்தால் தான தருமம் செய்வதற்கும் இப்படி மனம்

வராது. இல்லாமலிருப்பதே நல்லது. ஏதோ, ஏகம்பர் கொடுக்கிற செல்வத்தை நல்ல வழியில் தானதருமம் செய்துவிட்டுக் காலத்தைக் கழித்தால் அதுவே போதும்.

புலவர் : அப்படி இல்லேங்க. நீங்கள் வேண்டாம் என்று லும் வரவேண்டியது நிற்காது.

(சோதிடரைப் பார்த்து) அது சரி ; அந்த அம்மா எந்த இடத்திலிருந்து வருகிறார் என்று சொல்லு அய்யா.

சோதிடர் : அதையும் முன்னமே பார்த்துவைத்திருக் கிறேன். தெற்கே இருந்து—.

பச்சை : போய்யா, போ. தெற்கே எனக்கு உறவே கிடையாது.

புலவர் : புதிய உறவாக இருக்கலாம். யார் கண்டார்கள் ? உங்கள் புகழ்தான் நாடெல்லாம் பரவியிருக்கிறதே. எந்த முதலியார் உங்கள் சம்பந்தம் கிடைத்தால் விட்டுவிடுவார் ? யார் வேண்டுமானாலும் பெண் கொடுப்பார்கள். வயதும் நல்ல இளமைதானே ?

பச்சை : சரி, போதும். சோதிடரே ! நீங்கள் போவதாக இருந்தால் போகலாம். இருந்து தேவாரம் கேட்டா லும் சரி. புலவரே ! இந்தப் பேச்சைப் பேசுவதை விட, பெரியபுராணத்தில் ஏதாவது ஒரு பகுதி எடுத் துச் சொல்லுங்கள்.

புலவர் : சுந்தரமூர்த்தியின் திருமணம் ?

பச்சை : சரியான ஆள் அய்யா ! மறுபடியும் இரண்டு பெண்டாட்டிக்காரரின் கதையே கொண்டுவர எண்ணு கிறீர்களே. அது வேண்டாம். திருநாவுக்கரசர் புராணம் சொல்லுங்கள். தமக்கையார் திலகவதியாரின் தவத்தையும் பக்தியையும் சொல்லுங்கள்.

புலவர் : (பெரியபுராணத்தை விரித்து அந்தப் பகுதியைத் தேடுகிறார். படிக்கிறார் :—)

*தம்பியார் உளராக வேண்டும்என வைத்த தயா*
*உம்பர்உலகு அணையவுறு நிலைவிலக்க உயிர்தாங்கி*
*அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி*
*இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யார்இருந்தார்.*

அதாவது : திருநாவுக்கரசரின் தமக்கையாராகிய திலகவதியாருக்கு நேர்ந்த துயரம் சொல்ல முடியாதது. தமக்குக் கணவராக வர இருந்தவர் போர்க்களத்தில் மாண்டார் என்ற செய்தி கேட்டதும் தாமும் உடன் உயிர் துறக்க வேண்டும் என்ற கொள்கையில் முனைந்திருந்தார் அல்லவா? ஆனால் அந்த நிலையில் அந்த அம்மையாரின் அருள்நெஞ்சம் தம்முடைய தம்பியாரை நினைத்துக்கொண்டது. இந்த நிலவுலகத்தில் தம் தம்பியார் வாழ்ந்து விளங்க வேண்டும் என்ற விருப்பம் கொண்டார். அதையே சேக்கிழார் 'தம்பியார் உளராக வேண்டும் என வைத்த தயா' என்று உருக்கமாக எடுத்துரைக்கின்றார். அந்தத் தயா - அருள் தான் - திலகவதி அம்மையாரை உம்பர் உலகிற்குச் செல்லும் நிலையிலிருந்து விலக்கியது என்கிறார். கணவரை மணந்து மங்கலநாண் தாங்கவேண்டிய நிலையில் வாழ முடியவில்லை; அதற்கு ஈடாக எல்லா உயிரையும் போற்றும் அருள் தாங்கினார். நூல் தாங்கவில்லையாம்; அருள் தாங்கினாராம். இந்த வாழ்க்கையே ஒப்பற்ற தவவாழ்க்கையாக விளங்கியது; வீட்டிலிருந்தே செய்யும் தவம் இது. மற்றோரிடத்தில் சேக்கிழார் (சில பாட்டுக்களைத் தள்ளி) 'தூண்டுதவ விளக்கனையார்' என்று அந்த அம்மையாரைப் போற்றிக் கூறுகிறார் :

தூண்டுதவ விளக்கனையார் சுடரொளியைத் தொழுதென்னை
ஆண்டருளும் நீராகில் அடியேன்பின் வந்தவனை
ஈண்டுவினைப் பரசமயக் குழிநின்றும் எடுத்தாள
வேண்டும்எனப் பலமுறையும் விண்ணப்பம் செய்தனரால்.

(வேலையாள் வந்து எட்டிப் பார்த்து நிற்கிறான், கைகட்டி வாய்பொத்தி.)

பச்சை : என்ன'ப்பா ?

வேலையாள் : யாரோ நாலுபேர் உங்களைப் பார்க்க வேண்டும் என்று வந்திருக்கிறார்கள்.

பச்சை : இன்றைக்குத் திருநாவுக்கரசர் திருநாள். முதலியார் நல்ல வகையில் ஈடுபட்டு அமைதியாக இருக்கிறார். உத்தியோக வேலைகளை இப்போது கவனிக்க மாட்டார் என்று சொல்லி அனுப்பிவிடு.

வேலை : அப்படி வருகிறவர்கள் யாரையும் இராக்காலத்தில் விடுவதில்லை'ங்க. தேவாரம் நடக்கிறது என்று சொன்னேன். நாங்களும் போய் உட்கார்ந்து கேட்கிறோம் என்று சொல்கிறார்கள்.

பச்சை : சரி. வந்து உட்காரச் சொல்லு.

(வேலையாள் போகிறான். ஐந்துபேர் வருகிறார்கள்.)

புலவர் : இன்னொருவர் மிகுதியாகவே வந்திருக்கிறாரே.

புதியவர் : நான்தானுங்க. இவர்கள் உள்ளே வந்தார்கள். இவர்களோடு நானும் உங்களைப் பார்க்க வேண்டும் என்று வந்தேன்.

பச்சை : இவர்கள் யார் ?

புதியவர் : இவர்கள் காசிக்குப் போய் இப்போது ராமேசுவரம் போகிற வழியில் உங்களைப் பார்க்க வந்தார்கள். நான் சிதம்பரம் கோயில் தருமகர்த்தா. எங்கள் கோயிலுக்கு ஒரு தேர் வேண்டும். உங்களிடத்தில்

போய்க் கேட்டால் நடக்கும் என்று தீட்சிதர்கள் என்னை அனுப்பினார்கள். அதைச் சொல்லிக்கொள்ள வந்தேன்.

பச்சை : நல்லது, அப்படியே செய்துவைக்கிறேன். ஆகட்டும். நாளைக்குப் பகலில் வந்து கணக்குப்பிள்ளையிடத்தில் எல்லாம் விரிவாகச் சொல்லிவிட்டுப் போங்கள். இந்த மாதத்துத் தருமத்துக்கு எடுத்துவைத்த பணம் எல்லாம் செலவாகிவிட்டது. அடுத்தமாதத்து வரும்படியில் அந்தத் தொண்டு செய்வேன். நினைவு இருக்கும். வேறே ஒன்றும் இல்லையே.

புதியவர் இன்னொருவர் : காசிக்குப் போயிருந்தோம். அங்கே போகிறவர்களுக்கு ஒரு நல்ல சத்திரம் கட்டி வைத்தால் எவ்வளவோ புண்ணியம் !

பச்சை : நல்லது. எனக்கு ராமேசுவரத்தில் கட்ட வேண்டும் என்று மூன்றுமாதமாக ஆசை. நீங்கள் இப்போது சொன்னது நல்லதே. காசி, ராமேசுவரம் இரண்டையுமே ஒரு வேலையாக எடுத்துக்கொண்டு முடித்துவிடலாம். சத்திரத்துக்கு வேண்டிய வரும்படியும் ஏற்பாடு செய்ய வேண்டும். ராமேசுவரத்துக்கு நன்செய் வாங்கி ஆச்சு. இனிக் காசிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். எல்லாம் அவன் அருள். சரி. ஓதுவார் ! அப்பர்பெருமானுடைய திருத்தாண்டகத்தோடு இன்றைக்கு முடிக்கலாம்.

ஓதுவார் : (பாடுகிறார் :)

மனத்தகத்தான் தலைமேலான் வாக்கின் உள்ளான்
வாயாரத் தன்னடியே பாடும் தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தம் சிரத்தின் மேலான்
ஏழ்அண்டத்து அப்பாலான் இப்பால் செம்பொன்

புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதின் உள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றின் உள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத்து உச்சி உள்ளான்
காளத்தி யான்அவன்என் கண்ணு ளானே.

திருச்சிற்றம்பலம் !

தென்னு டுடைய சிவனே போற்றி !

பச்சை : (மூடிய கண்களைத் திறந்து கைகுவித்து)

எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி !

(மற்றவர்களும் கைகுவித்தபடி சொல்கிறார்கள். எல்லோரும் எழுந்து பேசாமல் நின்று வணக்கம் செலுத்திப் பச்சையப்பரிடம் விடைபெறுகிறார்கள். பச்சையப்பரும் அமைதியாக விடைபெறுகிறார்.)

## காட்சி : 12

### கி. பி. 1790

**இடம் :** *தஞ்சாவூரில் ஒரு தோட்டம்.*
**வேளை :** *மாலை 5 மணி.*
**மாந்தர் :** *தோட்டக்காரன், அவனுடைய மனைவி.*

தோட்டக்காரன் : (இலை தைத்துக்கொண்டே) ஏய் ! குப்பாயி ! சின்னஅம்மா புறப்பட்டுப் போய்விட்டார்களா?

மனைவி : (கீரை ஆய்ந்துகொண்டே) இப்போதுதான் போனார்கள். அனுப்பிவிட்டுத்தான் வந்தேன். ஏன் ? என்ன சொல்கிறாய் ?

தோட்டக் : ஒன்றும் இல்லை. சும்மா நினைத்துக்கொண்டேன் ; எப்படி இருக்கிறது உலகம் !

மனைவி : உலகம் அப்படியேதான் இருக்கிறது. ஆண்களாகிய நீங்கள்தான் ஒரு நிலையாக இருப்பதில்லை.

தோட்டக் : என்ன அது ? நானும் அய்யாவைப் போல் இரண்டாவது கலியாணம் பண்ணிக்கொள்ளப் போகிறேனா ? நான் ஒருகாலும் அந்த வம்புக்குப் போக மாட்டேன்.

மனைவி : யார் கண்டார்கள் ? உனக்கும் நிலம் நீர் காணி பணம் எல்லாம் இருந்தால், உனக்கும் பெண் கொடுப்பவர்கள் இருந்தால், நீயும் ஒரு சின்ன பெண்ணாகப் பார்த்துக் கலியாணம் செய்துகொள்வாய். பணம்தான் இல்லை. அதனால் பெண் கொடுக்க ஆளும் இல்லை. இருந்தால் சும்மா இருப்பாயா ?

தோட்டக் : அடி பைத்தியமே ! ஒருகாலும் அப்படி நினைக்காதே. என்னை வேண்டி வேண்டிக் கொடுத்தாலும்,

இன்னொருத்திக்குத் தாலிகட்டப் போவதில்லை. உன்னைக் கட்டிக்கொண்டு நான் பட்டதே போதாதா ?

மனைவி : எல்லாம் வாயால் சொல்வதுதான். அப்படிப்பட்ட முதலியார்அய்யாவே பண்ணிக்கொள்ள வில்லையா ? குடும்பத்துக்கு ஒரு குழந்தை இல்லையே என்று வருவார் போவார் எல்லாம் திரும்பத் திரும்பச் சொல்லித் தானே அவரும் பண்ணிக்கொண்டார் ?

தோட்டக் : அய்யா கதையும் என் கதையும் ஒன்றுகுமா ? அவருக்கு இரண்டு கலியாணம் அல்ல, இருபது கலியாணம் செய்தாலும் தகும். யாரோ ஒரு ராசா கதையில் வருகிறுரே, எத்தனையோ ஆயிரம் கலியாணம் பண்ணிக்கொண்டாராமே, அவரைப் போல எத்தனை கலியாணம் பண்ணிஞலும் அய்யாவுக்குத் தகும். அவர் பேர் என்ன ? புகழ் என்ன ? பச்சையப்ப முதலியார் என்று சொன்ஞல் இந்தத் தஞ்சாவூரே நடுங்குகிறதே ; தஞ்சாவூர் என்ன, காசி முதல் கன்னியாகுமரி வரையில் பச்சையப்ப முதலியார் என்று சொன்ஞல், அவரைப் போல் சீமான் இல்லை, அவரைப் போல் புண்ணியவான் இல்லை என்று எல்லாரும் சொல்கிறுர்களே. உலகமே அவருடைய பெயரைக் கேட்டால், மூக்கின்மேல் விரல் வைக்கிறதே. அவர் எங்கே ? நான் எங்கே ? நான் ஏழை வேலைக்காரன். எனக்குக் குழந்தை இல்லை என்று ஒரு கலியாணமா ? என் வயிற்றுக்கும் உன் வயிற்றுக்குமே கஞ்சி போதவில்லை ; குந்தக் குடிசை ஒன்று சொந்தமாக இல்லை. குழந்தை வேண்டுமா, குழந்தை ! அதற்கு ஒரு கலியாணம் வேண்டுமா, கலியாணம் !

மனைவி : இப்போது இப்படித்தான் சொல்வீர்கள். உங்கள் அக்கா தங்கைச்சி வந்து நாலுமுறை சொன்ஞல், அப்புறம் மனம் மாறிப்போகும்.

தோட்டக் : அப்படி நினைக்கவே நினைக்காதே, குப்பாயி. அது போகட்டும், சின்ன அம்மா எங்கே போயிருக்கிறார்கள், தெரியுமா ?

மனைவி : தாய்வீட்டுக்கு வேதாரணியத்துக்குப் போயிருக்கிறார்கள், தெரியுமா ?

தோட்டக் : ஏன் திடீரென்று புறப்பட்டார்கள் ?

மனைவி : அது தெரியாதா ? சக்களத்திப் போராட்டம் தான்.

தோட்டக் : முகத்தில் நல்ல களை இருக்கிறது. ஆனால் அகத்திலே ஒன்றும் காணோமே.

மனைவி : அப்படிச் சொல்லக்கூடாது. அந்த அம்மாவைக் கேட்டுப் பார்த்தால் தெரியும். வருத்தத்துக்கு ஏதோ காரணம் இருக்க வேண்டும்.

தோட்டக் : பெரிய அம்மா அப்படி ஒன்றும் கெட்டவர்களாக இல்லையே. நம்மைப் பொறுத்த வரையில் எப்படி இருக்கிறார்கள், நீயே சொல்லு. ஈவு இரக்கம் உள்ளவர்கள், முதலியாரைப் போலவே அன்பானவர்கள்—

மனைவி : சின்ன அம்மா மட்டும் கெட்டவர்களா ? நம்மிடம் நல்லபடிதான் பேசுகிறார்கள். ஆனாலும் பெரிய மனிதருக்கு வாழ்க்கைப்பட்டு வந்தால், வந்த இடத்தில் கொஞ்சமாவது உரிமை வேண்டும் அன்பு வேண்டும் என்று ஆசை இருக்காதா ?

தோட்டக் : குப்பாயி ! நீ சொல்வதே எனக்குப் பிடிக்கவில்லை. பெண்டாட்டி என்றால், கட்டின கணவனுடைய மனம் அறிந்து நடந்துகொள்ள வேண்டும்.

மனைவி : அதுதான் கூடாது. கணவன் என்றால், கொஞ்சம் பெண்டாட்டியின் மனம் அறிந்து நடக்கக்கூடாதா ?

தோட்டக் : ஏது ? நீ சின்ன அம்மாவின் கட்சிபோல இருக்கிறதே !

மனைவி : அப்படியானால் நீ பெரிய அம்மாவின் கட்சியா ?

தோட்டக் : சே ! நான் எந்தக் கட்சியும் இல்லை. யார் எப்படிப் போனால் நமக்கு என்ன ? நம் வேலையைச் செய்துவிட்டு, கிடைத்த கஞ்சியைக் குடித்துவிட்டுக் காலத்தைத் தள்ளுவோம். என்ன குப்பாயி !

(தைத்த இலையை அவள் எதிரே வீசுகிறான்.)

மனைவி : அப்படி இருக்க முடியாதே ! நாளைக்கு நாம் பெரிய அம்மா வீட்டில் வேலை செய்வதா ? சின்ன அம்மா வீட்டுக்குப் போவதா ?

தோட்டக் : சின்ன அம்மா வீடு—அது என்ன ? எங்கே இருக்கிறது ? புதுப் பேச்சாக இருக்கிறதே !

மனைவி : இது தெரியாதா உனக்கு ? சின்ன அம்மா ஏன் ஊருக்குப் போனார்கள் ?

தோட்டக் : தெரியாதே ! என்ன குப்பாயி ! என்ன என்னவோ கதை கட்டுகிறாய் ?

மனைவி : வேறே வீடு தனியே பார்த்துவைத்தால்தான் வர முடியும் என்று சொல்லிவிட்டுப் போயிருக்கிறார்கள்.

தோட்டக் : அப்படியானால்—!

மனைவி : தனி வீடுதான். அடுத்த வாரத்துக்குள் முதலியார் ஏற்பாடு செய்வார், பார்.

தோட்டக் : பச்சையப்ப முதலியார் என்று பேரைச் சொன்னால், அழுகிற குழந்தையும் சிரிக்கும் என்று சொல்வார்கள். கடைசியில், அவர் வீட்டிலேயே இந்தக் கதையா ? கலியாணமாகி இன்னும் இரண்டு மாதம் முடியவில்லை. இதற்குள் இரண்டு குடித்தனமா ?

மனைவி : அதற்கு என்ன செய்யலாம் ? முதலியார் அக்காவைப் பட்டணத்துக்கு அனுப்பிவிட்டால், ஒருவேளை இரண்டு பெண்டாட்டிகளும் ஒத்துப்போனாலும் போகலாம்.

தோட்டக் : அப்படிச் செய்ய முடியுமா ? செய்யவே மட்டார். உடன் பிறந்த அக்கா, எவ்வளவு அன்பாக இருக்கிறார்கள். வாய் வந்து, போ என்று சொல்ல முடியுமா ?

மனைவி : சொல்லாவிட்டால், பட வேண்டியதுதான். அக்காபெண்ணிடத்தில் அவர் அன்பாக இருக்கிறார். புதிய அம்மாவிடத்தில் அப்படி இல்லை. அக்கா சொல்லிச் சரிப்படுத்தக் கூடாதா ?

தோட்டக் : நான் சொல்கிறேன் ; முதலியாருக்கு அக்கா பெண் என்றும் புது உறவு என்றும் வேற்றுமை கிடையாது. இந்தப் புதிய அம்மாவுக்கு நல்ல குணமே இல்லை என்றுதான் எனக்குப் படுகிறது. முகத்தைப் பார்த்தால் தெரியவில்லையா ? சிடுமூஞ்சி !

மனைவி : இரண்டாவது கலியாணமே பண்ணிக்கொள்ளா திருந்தால் இவ்வளவு தொல்லை இல்லை.

தோட்டக் : நான் என்னவோ நினைத்தேன். பணம் இருந்தால் இந்தத் தொல்லை இருக்காது என்று நினைத்தேன். கடைசியில் பார்க்கப் போனால், சாவு, நோவு, கவலை இந்த மூன்றும் பணக்காரர் என்றும் ஏழை என்றும் பார்க்காமல் வரும்போல் தெரிகிறது.

மனைவி : சே ! சே ! என்ன சொல் சொல்கிறாய் ! முதலியார் அய்யாவைப் பற்றி அந்தச் சொல் சொல்லலாமா ? தப்பு, தப்பு.

தோட்டக் : சும்மா, பேச்சுக்குச் சொன்னேன் குப்பாயி !

## காட்சி : 13

### கி. பி. 1791

**இடம் :** தஞ்சாவூர்க் கோயில் குளத்துக்கரை, மரத்தடி.
**வேளை :** மாலை 5 மணி.
**மாந்தர் :** ஓதுவார் ; புலவர் பிறகு.

ஓதுவார் : (தனியாக உட்கார்ந்துகொண்டு, வாயில் இசை கூட்டியபடியே எதையோ சிந்தித்தல் ; புலவர் வந்து நிற்கிறார். அவரைக் கண்டதும், நகர்ந்து இடம் கொடுக்கிறார்.)
வாங்க அய்யா ! எங்கே இந்தப் பக்கம் ?

புலவர் : இப்படியே வருவது வழக்கம்தான். ஆமாம். நேற்று இராத்திரி நீங்கள் ஏன் துபாஷ் முதலியார் வீட்டுக்கு வரவில்லை.

ஓதுவார் : நானா வரவில்லை ? நீங்கள்தான் வரவில்லை. நான் உங்களைக் கேட்கலாம் என்று இருந்தேன்.

புலவர் : நான் போனேன். வாசற்படியிலேயே வேலை யாள் என்னைப் பார்த்து நிறுத்திவிட்டான். 'யாராக இருந்தாலும் உள்ளே விடாதே' என்று சொன்ன தாகச் சொல்லித் திருப்பி அனுப்பிவிட்டான். ஏதோ காரணம் இருக்கும் என்று திரும்பி வந்துவிட்டேன். நீங்கள் வரவில்லை என்று எண்ணினேன்.

ஓதுவார் : என் கதையும் அதுவேதான். ஆனால் நான் காரணமும் ஒருவகையாகத் தெரிந்துகொண்டு வந் தேன். வேலையாள் இருக்கிறானே, அவன் நம் பக் கத்து வீட்டிலே இருந்தவன். அவன்தான் என்னைத் துபாஷ் முதலியாருக்கு அறிமுகம் செய்துவைத்த

வன். என்னிடம் மட்டும் அவன் எல்லாவற்றையும் சொல்லிவிடுவான்.

புலவர் : முதலியார்வீட்டு ரகசியம் அவனுக்கு மட்டும் எப்படித் தெரிந்துவிடும், நமக்குத் தெரியாதபோது ?

ஓதுவார் : அது அருமையா ? மகாராஜா வீட்டு ஆள் இந்த ஆளிடம் சொல்லிவிடுகிறான்.

புலவர் : அவனுக்கு மட்டும் எப்படித் தெரியும் ?

ஓதுவார் : பெண்கள் பேசும்போது தெரிந்துகொள்கிறான். அவர்கள், ரகசியம் பேசும்போது கேட்டுத் தெரிந்துகொள்கிறான். அதுவும் இல்லையானால், அடிக்கடி முகத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்கிறான். இதற்கு ஒரு முயற்சியா ?

புலவர் : ஆ ! அப்புறம் சொல்லுங்கள்.

ஓதுவார் : எல்லாம், ஆமையிலே ஆமை பொல்லாத ஆமை பொறாமை இருக்கிறதே, அது செய்த வேலைதான்.

புலவர் : மூத்தாள் இளையாள் வம்பு வந்துவிட்டதா ? இருவரும் தனித்தனி வீட்டில் இருந்தார்களே ! பொறாமை எப்படி வந்தது ? அப்பொழுதே துபாஷ் முதலியார் இந்த இரண்டாவது சனியன் வேண்டாம் என்று சொன்னார் ; தடுத்தார்.

ஓதுவார் : அது வேறே கதை. அதனால் முதலியார் துன்பப்பட மாட்டார். யார் யாரை எப்படி எப்படி எங்கெங்கே வைத்து நடத்த வேண்டும் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும். அப்படி அகப்பட்டுக் கொள்ளமாட்டார் அவர்.

புலவர் : வேறு பொறாமை அவருக்கு ஏது ? வஞ்சனையா, தீய எண்ணமா, மோசமா ஒன்றும் இல்லாதவர். அவரிடத்தில் யார் பொறாமை கொள்ள முடியும் ?

ஓதுவார் : சொல்வதைக் கேளுங்கள். நீங்களே பேசிக் கொண்டிருந்தால்—

புலவர் : சரி. சொல்லுங்கள். என் மனம் தாங்கவில்லை. அதனால்—

ஓதுவார் : துபாஷ் முதலியார் நேற்று வந்தவர், உண்மை தானே !

புலவர் : உண்மைதான்.

ஓதுவார் : நேற்று வந்தவர் இந்த மகாராஜாவிடத்தில் செல்வாக்குப் பெற்றுவிட்டார். உண்மைதானே ?

புலவர் : உண்மைதான். மகாராஜாவுக்கே ஒரு லட்சம் வராகன் கடன் கொடுத்திருக்கிறார்.

ஓதுவார் : பணம் சேர்த்ததுமட்டும் அல்ல, பேரும் பெருமையும் பெற்றுவிட்டார். உண்மைதானே ?

புலவர் : உண்மைதான்.

ஓதுவார் : நேற்று வந்தவர் இவ்வளவு முன்னுக்கு வந்து விட்டார். உண்மைதானே ?

புலவர் : உண்மைதான்.

ஓதுவார் : இவருக்கு முன்னே துபாஷாகவும் ஏஜண்டாகவும் இருந்து உழைக்கிறவர்கள் ஐரோப்பியர்கள் பல பேர் இருக்கிறார்கள், இதே தஞ்சாவூரில். உண்மை தானே ?

புலவர் : ஆமாம்.

ஓதுவார் : அவர்கள் எல்லாம் முன்னே அதிக வட்டிக்குக் கடன் கொடுத்து நிறையப் பணம் சேர்த்தார்கள். உண்மைதானே.

புலவர் : சரி.

ஓதுவார் : துபாஷ் முதலியார் வந்த பிறகு, இவர்களால் ஒரு காசும் சம்பாதிக்க முடியாமல் போய்விட்டது. உண்மைதானே ?

புலவர் : ஊம்.

ஓதுவார் : பொறுமைக்கு வேறே காரணம் வேண்டுமா ?

புலவர் : (பெருமூச்சு விடுதல்) நல்ல உலகம் அய்யா !

ஓதுவார் : இதுதான் உலகம்.

புலவர் : அந்த ஐரோப்பியர்களின் பொறுமை துபாஷ் முதலியாரை என்ன செய்யும் ? கும்பெனி, நவாபு, மகாராஜா எல்லாம் பச்சையப்பர் பக்கம் இருக்கும் போது, இந்த ஏழெட்டு வெள்ளைக்கார வியாபாரிகள் என்ன செய்ய முடியும் ?

ஓதுவார் : கத்தி எடுத்தால் துப்பாக்கி எடுத்தால் அவர்களால் ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் காகிதம் எடுத்தார்கள். பேனா எடுத்தார்கள். தீட்டிவிட்டார். முதலியார்மேல் பாய்ந்துவிட்டது.

புலவர் : ஏது அய்யா ? எனக்குமேல் புராணப் பிரசங்கம் செய்கிறீர்களே.

ஓதுவார் : எல்லாம் அவ்விடத்துப் பழக்கமே. கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவி சொல்லுமாமே.

புலவர் : மேலுக்கு எழுதிப் போட்டாலும் நடக்காதா ? கும்பெனிக்காரர்தானே முதலியாரை இங்கே அனுப்பி வைத்தார்கள் ?

ஓதுவார் : அது ஒரு காலம்.

புலவர் : துபாஷ் முதலியாரின்மேல் குற்றம் ஒன்றும் சொல்ல முடியாதே. அவரைப் பற்றி இதுவரையில் பழியாக ஒருத்தரும் சொன்னதில்லை ; நானும் கேள்விப்பட்டதில்லை. என்ன எழுதினார்களாம் ?

ஓதுவார் : பச்சையப்ப முதலியார் மகாராஜவுக்குக் கடன் கொடுத்துக் கடன்கொடுத்து அவருடைய கிராமங்களை எல்லாம் ஒவ்வொன்றாக ஏமாற்றி வாங்கிக்கொள்கிறார் என்றும், அவரை மேலும் மேலும் கடனாளியாக்கிக்

கெடுக்கிறார் என்றும், அடமானம் வைத்த கிராமங்களில் விளையும் தானியங்களைக் குறைந்தவிலைக்கு மொத்தமாக வாங்கிக்கொண்டு பிறகு விலையை ஏற்றிவிடுகிறார் என்றும், அப்படி விலை ஏற்றுவதால் ஏழை மக்கள் பிழைக்க முடியவில்லை என்றும் என்னென்னவோ எழுதிப்போட்டார்கள். முதலியாரைப் பற்றிமட்டும் தனியாக எழுதினால் சர்க்கார் ஒன்றும் செய்யமாட்டார்கள் என்று சின்னையமுதலியார், சுப்பராவ் இரண்டு பேரையும் சேர்த்து எழுதிப் போட்டார்களாம். இந்த மூன்று பேரையும் தஞ்சாவூரை விட்டுப் போகும்படியாகச் செய்தால்தான், தஞ்சாவூர் சீர்ப் படும் என்று எழுதிப் போட்டார்களாம்.

புலவர் : மற்ற இரண்டுபேர்மேலும் எழுதினால் அது ஓரளவுக்கு உண்மைதான். ஆனால் பச்சையப்பர் ஒரு நாளும் நெறி தவறிப் போகவில்லையே. அப்புறம் ?

ஓதுவார் : அப்புறம் என்ன ? மேலே இருந்து உத்தரவு வந்தது. தஞ்சாவூரை விட்டு உடனே வெளியே வந்துவிட வேண்டும் என்று உத்தரவு வந்தது.

புலவர் : அடடா ! என்ன உலகம் இது ? பொறாமை இப்படியா செய்ய வேண்டும் ? ஆனால் துபாஷ் முதலியாரை இவர்களே வேண்டி வேண்டி அனுப்பினார்களாமே.

ஓதுவார் : ஆமாம். அது ஒரு காலம்.

புலவர் : அதனால் முதலியார்க்குத் தேவாரம் பாடுவதிலும் ஊக்கம் இல்லை. அதையும் நிறுத்திவிட்டார் ; பாவம் ! என்ன செய்வார் ? நல்ல மனம் !

ஓதுவார் : இல்லாததைச் சொன்னால் அவருடைய மனம் என்ன பாடு படும் ? திருடனைத் திருடன் என்று சொன்னால் அவனும் அடிக்க வருவான். திருடாதவனை அப்படிச் சொன்னால் பொறுக்க முடியுமா ?

புலவர் : மனவேதனையாகத்தான் இருக்கும். ஆனால், முதலியாருக்கு என்ன குறைவு ? இப்போது அவருக்கு இருக்கிற செல்வமே ஏழெட்டுத் தலைமுறைக்கு வருமே. பேசாமல் பட்டணமே போய்விடுவார்.

ஓதுவார் : இதைப் பற்றிக் கவலைப் படாமல் போய்விடுவார். ஆனால் ஏற்பட்ட பழிச்சொல்லை நீக்கிக்கொள்ள வேண்டுமே, அதுதான் அவருக்குக் கவலையாக இருக்கும். மானம் பெரியது அல்லவா ? என்ன செய்வாரோ, தெரியவில்லை.

புலவர் : சத்தியம் வெல்லும் அய்யா, சத்தியம் வெல்லும். கட்டாயம் வெல்லும். பச்சையப்ப முதலியார் சும்மா இருக்கப் போவதில்லை ; பார். உலகமே அவர்பக்கமாக இருக்கிறது.

ஓதுவார் : பார்க்கலாம். அதுதான் நமக்கு வேண்டியது. சரி, வரட்டுமா ?

## காட்சி : 14

### கி. பி. 1791

**இடம் :** கோமளேசுவரன் பேட்டை, வீட்டுக் கூடம்.

**வேளை :** காலை.

**மாந்தர் :** பச்சையப்ப முதலியார் ; பவுனி நாராயண பிள்ளை வருதல்.

பச்சை : (பவுனி நாராயண பிள்ளை வருவதைப் பார்த்து, எழுகிறார்) வா'ங்க மாமா, வாங்க வாங்க. நானே வர வேண்டும் என்று இருக்கிறேன். அதற்குள் நீங்களே வந்துவிட்டீர்களே.

பவுனி : (நாற்காலியில் உட்கார்ந்து), அதற்கென்ன'ப்பா. நீ எவ்வளவு கவலையாக இருக்கிறாயோ என்னவோ என்று நானே பார்க்க வந்தேன். உன் கடிதம் பார்த்தேன். எல்லாம் தெரிந்துகொண்டேன். இருந்தாலும் என் மனத்துக்கு விளக்கமாக இல்லை. ஒரு வாரமாக எனக்கு இதே கவலைதான். ஏன் அப்படிச் செய்தார் கள் ? உட்காரு.

பச்சை : (உட்கார்ந்து) எல்லாம் பொறாமைதான் மாமா ?

பவுனி : ஊரார்க்குப் பொறாமை இருக்கலாம். ஆனால் கும்பெனிக்கு உன்மேல் பொறாமை ஏது ? கவர்னர் ஆர்ச்சிபால்ட் காமலே உன்னை அங்கே அனுப்பினார். பிறகு அவரே இப்படி உத்தரவு போட்டாரே ! என்ன காரணம் ?

பச்சை : நான் சொல்வதை நம்பவில்லை. ஆனால் பொறாமையால் அங்குள்ளவர்கள் சொல்வதைக் கவர்னர் நம்பு கிறார்.

பவுனி : கவர்னர் காமல்தானே உன்னை வலியக் கூப்பிட்டு அனுப்பினார் ?

பச்சை : ஆமாம், மாமா. எனக்கு அந்த வேலை வேண்டிய தில்லை என்று மறுக்கவும் மறுத்தேன். அது ஒரு காலம். இப்போது நீ தஞ்சாவூரிலே இருக்கவே கூடாது என்று உத்தரவு அனுப்பிவிட்டான். அத ஞல் எனக்கு எவ்வளவு வேலை, எவ்வளவு தொல்லை ! தஞ்சாவூர் அரசரிடமிருந்து பணத்தை வசூல் செய்து கும்பெனிக்கு அனுப்புவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிடும். இருந்தாலும் பொறுமையோடு செய்துவந்தேன்.

பவுனி : இதனுல் எந்த வகையிலும் நீ தஞ்சாவூர் அரச ருக்கு வருத்தம் உண்டாக்க வில்லையே. உன்னிடத்தில் அவர் எப்படிப் பழகுகிருர் ?

பச்சை : அரசருக்கு என்மேல் அளவற்ற நம்பிக்கை உண்டு. நான் தவிர வேறு யாராக இருந்தாலும், அரசரிடம் இவ்வாறு பணம் வசூல் செய்திருக்க முடி யாது. இது மட்டும் உறுதி.

பவுனி : நீ அரசருக்குக் கொடுத்திருந்த லட்சம் வராகன் கடன் என்ன ஆயிற்று ? இன்னும் பாதி வரவேண்டும் அல்லவா ?

பச்சை : கவர்னர் இப்படி என்னைக் கைவிடுவார் என்று முன்னமே தெரிந்திருந்தால், நான் அரசருக்குக் கடன் கொடுத்திருக்க மாட்டேன். அதையும் மற்ற ஐரோப் பியத் தரகரைப் போல், அதிக வட்டிக்குக் கொடுக்க வில்லை.

பவுனி : நீ குறைந்த வட்டிக்குக் கடன் கொடுத்ததுதான் அந்த ஐரோப்பியத் தரகர்களுக்கு பொருமை உண் டாக்கியது.

(வேலையாள் ஒரு பொன் தட்டில் பழம் வெற்றிலை பாக்கு கல்கண்டு கொண்டுவந்து வைத்தல்.)

பச்சை : உண்மைதான் மாமா. நான் அப்படிச் செய்வதனுல், நான் போன பிறகு அவர்களுக்கு வருவாய் குறைந்துபோயிற்று. அவர்கள் கடன் கொடுத்துக் கொடுத்துச் செல்வம் சேர்ப்பதற்கு இடம் இல்லாமல் செய்துவிட்டேன். அதனுல்தான் சென்னை அரசாங்கத்தார்க்கு என்னைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் எழுதினுர்கள்.

பவுனி : உன்மேல் மட்டும் எழுதினுர்களா ? இன்னும் யார்மேல் எழுதினுர்கள் ?

பச்சை : என்னுடன் ஏஜண்டுகளாக உள்ள சின்னைய முதலியார்மேலும் சுப்பராவ்மேலும் எழுதினுர்கள். அரசரை மீளாத கடன்காரராக ஆக்கிவிட்டதாகவும் எங்களால் சமஸ்தானமே அழிந்துவிட்டதாகவும் எழுதினுர்கள். எத்தனையோ கிராமங்களை ஏமாற்றிக் கைப்பற்றிக்கொண்டதாகவும், நெல் எல்லாம் வாங்கிவைத்துக்கொண்டு விலை ஏற்றிவிட்டதாகவும் அதனுல் ஏழை மக்களுக்கு இடர் உண்டாக்கியதாகவும் பொய்யாக எழுதினுர்கள். இதனுல் (முகம் சோர்ந்து தலை குனிந்து) எனக்கு உண்டான நஷ்டம் பெரிது அல்ல ; ஆனுல் மனவருத்தமும் கவலையும் என்னுல் தாங்க முடியவில்லை. எவ்வளவோ நல்ல வழியில் உழைத்துப் பாடுபட்டேன். கடைசியில் வீணுன பழிக்கு ஆளானேன் என்பதை நினைக்கும்போது மிகமிக வருத்தமாக இருக்கிறது. வாழ்க்கையே என்னவோபோல் இருக்கிறது. உங்களிடத்தில் தவிர, வேறு எங்கே போய்ச் சொல்வது ?

பவுனி : இப்படி மனம் விட்டுவிடக் கூடாது. இடையூறும் துன்பமும் வரும், போகும். நாம் நம்பிக்கையோடு கடமையைச் செய்ய வேண்டும். எப்படியும் சென்னைச் சர்க்காருக்கு உண்மை தெரிந்துவிடும். கும்பெனிக்காரர் மூலமாகச் சொல்லுவோம் ; வழக்காடுவோம். சோர்ந்து போய் விட்டுவிடக் கூடாது. மனம் உடைந்துபோகக் கூடாது. வியாபாரத்தில் ஊதியமே வரும் என்று எதிர் பார்க்கமுடியுமா ? நஷ்டமும் வரும். அதைப் போல் தான் துபாஷ் தொழிலும். நான் இருக்கிறேன். ஆனதைச் செய்யலாம். கவலைப்படாதே. உன்னைத் தஞ்சாவூர்க்கு உதவியாக அழைத்துச் சென்ற பெற்றி (Petrie) துரை இருக்கிறார். அவரும் நமக்கு வேண்டியதைச் செய்வார். கவர்னரின் துபாஷ் வீரபெருமாள் பிள்ளை இருக்கிறார். அவர் மனம் வைத்தால் என்ன நடக்காது ? அவரிடம் நீ போய்ச் சொன்னால் போதுமே.

பச்சை : போகிறேன் மாமா. உங்கள் அன்பையும் ஆசியையும் நம்பித்தான் மறுபடியும் இந்தப் பட்டணத்துக்குள் கால்வைத்திருக்கிறேன். இல்லையானால்—

பவுனி : (எழுந்து நின்று, வெற்றிலை பாக்கும் கல்கண்டும் ஒரு பழமும் எடுத்துக்கொள்கிறார்.) நான் போய் இப்போதே எனக்குத் தெரிந்த துரைகளைப் பார்க்கிறேன். நாமும் தகுந்தபடி உண்மையை எழுதித் தெரிவிக்கலாம் ; வழக்காடலாம் ; விடக்கூடாது.

(புறப்படுகிறார்)

பச்சை : மாமி எப்படி இருக்கிறார்கள் ? தம்பி அய்யா பிள்ளை எப்படி இருக்கிறான் ?

(கேட்டுக்கொண்டே பின்தொடர்ந்து செல்கிறார்.)

## காட்சி : 15

### கி. பி. 1791

**இடம் :** *சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.*

**வேளை :** *மாலை.*

**மாந்தர் :** *ஓதுவார் இருவர்.*

முதல் ஓதுவார் : *என்ன அய்யா ? எங்கே போயிருந்தாய் ? இரண்டு மூன்று வாரமாகக் கண்ணிலே காணோமே.*

இரண்டாம் ஓதுவார் : *என் தமையன் உடம்பு நன்றாக இல்லாமல் படுக்கையாக இருந்தார். அவரைப் பார்க்கச் சிதம்பரத்துக்குப் போயிருந்தேன். அதனால்தான் முதலியார் வீட்டுக்கு வரவில்லை. இல்லாவிட்டால் நிற்பேனா ? முதலியார் எப்படி இருக்கிறார் ? தஞ்சாவூர் எப்படி ஆயிற்று ?*

முதல் : *நல்லபடி இருக்கிறார். அவருக்கு என்ன குறைவு ? தஞ்சாவூரைப் பார்த்தா அவர் பிழைக்கிறார் ? ஒரு துபாஷ் வேலை இல்லாவிட்டால் நாலு துபாஷ் வேலை அவருக்குக் காத்திருக்கிறது. பழைய சலிவன்துரை சீமைக்குப் போய்விட்டாரே, அவருடைய மகனிடத்திலே இப்போது துபாஷாக இருக்கிறார். இன்னும் இரண்டொரு துரைகளிடத்திலும் துபாஷ் வேலை நடத்துகிறார். அவருக்கு ஓய்வு ஏது ?*

இரண்டாம் : *அந்தப் பெரிய சலிவன்துரையை நான் பார்த்திருக்கிறேன். அவரிடத்தில் நம் முதலியார் துபாஷ் ஆக இருந்தபோதுதான் பார்த்திருக்கிறேன். அப்பனிடத்தில் வேலையாக இருந்தார் ; இப்போது மகனிடத்தில் இருக்கிறார். சரிதான். முதலியார்*

எப்போதும் சும்மா இருக்க முடியாது. அவருடைய திறமைக்காக எல்லோருமே வேண்டி வேண்டி அழைப்பார்கள்.

முதல் : தஞ்சாவூருக்கே மறுபடியும் போயிருக்க வேண்டும் என்று முதலியாருக்கு ஆசை.

இரண்டாம் : ஆமாம் ; அவருடைய உடம்புக்குப் பட்டணம் ஒத்துக்கொள்ளவில்லையாம். முன் ஒருநாள் சின்னய்யா முதலியார் பேசிக்கொண்டிருந்தபோது சொன்னார். பட்டணத்து ஈரக்காற்று அவருக்குப் பிடிக்கவில்லையாம். அவர் நினைத்தது கைகூடிவிட்டால், திரும்பவும் தஞ்சாவூருக்குப் போய்விடுவார்.

முதல் : அதற்காக அவர் மேலதிகாரிகளுக்கு எழுதிப் போட்டிருக்கிறார். கவர்னரே மறுபடியும் அனுகூலமாக உத்தரவு அனுப்புவார் என்று எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள்.

இரண்டாம் : அவர் தவிர வேறே தக்க ஆள் இல்லை அய்யா! தஞ்சாவூரில் அவர் இல்லை என்றால், கம்பெனிக்கு ஒரு காசு வராது.

முதல் : உண்மைதான். அந்தத் திறமை முதலியாருக்கே சொந்தம்.

இரண்டாம் : ஆமாம். சிதம்பரத்தில் இருந்தபோது என் அண்ணன் ஒன்று சொன்னாரே.

முதல் : என்ன அது ? நடராசர் கோயில் திருப்பணி பற்றியா ? கோயிலில் தாசிகள் நடனம் இல்லாமல் செய்தால், முதலியார் தேர் முதலிய கைங்கரியம் செய்வதாகச் சொன்னாராம்.

இரண்டாம் : அந்தத் தீட்சிதர்கள் அதற்கு ஒத்துவரவில்லையாமே. அதனால் முதலியார் ஒன்றும் செய்வதற்கில்லையே என்று மனவருத்தப்பட்டாராம்.

முதல் : அதுவா ? உண்மைதான். அவர்கள் பொல்லாதவர்கள். ஒரு வள்ளல் தாமாகவே முன்வந்து திருப்பணி செய்வதையும் ஒத்துக்கொள்ளாமல் விட்டுவிட்டார்கள். ஆனால் முதலியார் செய்யத்தான் போகிறார்.

இரண்டாம் : அது எப்படி நடக்கும் ? சிதம்பரத்தில் அவர்கள் இட்டதுதான் சட்டம். அதை மீறி ஒன்றும் நடக்காது.

முதல் : பச்சையப்ப முதலியாரின் பேரைச் சொன்னால், எந்தச் சட்டமும் அசைந்து போகும், தெரியுமா ? மணலி சின்னய்யா முதலியார் இருக்கிறாரே, அவர் இதைக் கேள்விப்பட்டுத் தாமாகவே தீட்சிதர்களோடு கலந்துபேசி, அவர்கள் ஒத்துவரும்படியாகச் செய்து விட்டாராம்.

இரண்டாம் : அப்படியா செய்தி ? இது இந்த வாரத்தில் நடந்ததாக இருக்க வேண்டும். நான் போன வாரமே சிதம்பரத்தை விட்டுத் திருவண்ணாமலைக்கு வந்துவிட்டேன். அதனால் தெரியாமல் போய்விட்டது.

முதல் : அதுமட்டுமா ? அங்கே பெருமாள்கோயிலும் இருக்கிறது அல்லவா ? தீட்சிதர்கள் அங்கே என்னவோ செய்து கலகப்படுத்தியிருக்கிறார்கள். வைஷ்ணவர்கள் அதை முன்னிட்டு உற்சவத்தைத் தடுக்கிறார்களாம். அதையும் முதலியார் ஒழுங்குபடுத்தப் போகிறார். எல்லாம் சரியாகிவிடும்.

இரண்டாம் : அப்படியானால், பச்சையப்ப முதலியார் தருமத்தால், நடராசர்க்கு நல்ல தேர் கிடைக்கப்போகிறது.

முதல் : ஆமாம். ஜூன் மாதம் 28௳ கொடியேற்றுவிழா என்று இன்று காலையில்தான் யாரோ சொன்னார்.

இரண்டாம் : அப்படியானால், நான் மறுபடியும் சிதம்பரத்துக்குப் போக வேண்டிய வேலை இருக்கிறது.

முதல் : உற்சவத்துக்கு நானும் வந்திருந்து பார்க்க வேண்டும் என்றுதான் இருக்கிறேன். நடராசர் எப்படி அருள் செய்கிறுரோ, பார்க்க வேண்டும்.

இரண்டாம் : சரி. இன்று இரவு தேவாரம் திருவிசைப்பா ஓதுவது உண்டு அல்லவா ?

முதல் : ஆ ஆ ! எது நின்ருலும் அது நிற்காது. ஆயிரம் வேலை இருந்தாலும் முதலியார்வீட்டில் தேவாரம் நிற்குமா ?

இரண்டாம் : சரி. இரவு பார்க்கலாம். வருகிறேன். வணக்கம்.

## காட்சி: 16

### கி. பி. 1792

**இடம் :** பவுனி நாராயணபிள்ளை வீடு, சென்னை.

**காலம் :** காலை.

**மாந்தர் :** பவுனி நாராயண பிள்ளை, அவருடைய மகன் அய்யா பிள்ளை.

(பவுனி நாராயண பிள்ளை சாய்வுநாற்காலியில் சாய்ந்த படி இருக்கிறார். அவர் எதிரே தூணில் சாய்ந்தபடி மகன் அய்யா பிள்ளை நிற்கிறார்.)

பவுனி : உனக்கு மிகவும் நல்ல காலம் வந்திருக்கிறது என்று தெரிந்துகொள். பச்சையப்பன் தான் செய்து வந்த தொழிலை உனக்குக் கொடுத்துவிட்டுத் தஞ்சா வூர்க்குப் போயிருக்கிறான். அவன் சொன்னதால் தான் சின்ன சவிவன்துரை உன்னைத் துபாஷாக ஏற் றுக்கொண்டார். நீயும் பச்சையப்பனைப் போல் உண் மையாக நடந்து உழைத்தால், முன்னுக்கு வரலாம்.

அய்யா : (தந்தையைப் பார்க்காமலே, தலை குனிந்தபடி) அப்படியே உழைக்கிறேன்'பா.

பவுனி : எந்தக் காலத்திலும் உண்மைக்கு மதிப்பு இருக் கிறது. ஏராளமான வரும்படி கிடைக்க வேண்டும் என்று உருட்டலும் புரட்டலும் செய்யக் கூடாது. வருவது வரட்டும் என்று வழியோடு நட.
(சிறிது நேரம் அமைதி. அய்யா பிள்ளை பேசவில்லை.) பச்சையப்பனை அழைத்துக்கொண்டு அவனுடைய தாயார் இந்த வீட்டுக்கு வந்து என்னுடைய உதவி கேட்டபோது நீ சின்ன குழந்தை. உனக்கு ஒன்றும்

தெரியாது. திக்கற்ற குடும்பமாய்த் தாயும் மக்களுமாக வந்தார்கள். அவனைக் கொஞ்சம் படிக்கவைத்து நான்தான் வேலையிலும் சேர்த்துவைத்தேன். அந்த நன்றியை அவன் நாளிது வரையில் மறக்கவில்லை. அதனால்தான், தான் தஞ்சாவூர்க்குப் போகும்போது, உன்பேரில் தன் வேலையை வைத்துவிட்டுப் போயிருக் கிறான். அந்த நல்ல குணம் இருப்பதால்தான் அவன் முன்னுக்கு வருகிறான். திக்கற்ற ஏழையாக இருந்த பச்சையப்பன் இன்றைக்கு நம்மைவிட எத் தனையோ மடங்கு சொத்து உள்ள செல்வனாகிவிட் டான். ஆனாலும் அவனிடம் சூது புரட்டல் இருக் கிறதா, பார். தலைக்கிறுக்கு - கருவம் - இருக்கிறதா பார். என்னிடம் இன்னமும் மாமா மாமா என்று பணிவோடு பேசுகிறான்; அடக்கமாக நடக்கிறான். என்பேருக்கு உண்டிகள் அனுப்புகிறான். அவனு டைய பணம் எல்லாம் என்னிடம்தானே சேர்ந்து கிடக்கிறது. எவ்வளவு நம்பிக்கை, பார்.

அய்யா : பாவம், அவருக்கு உடம்புதான் சரியாக இல்லை.

பவுனி : ஓயாத வேலைதான் காரணம். சின்ன பிள்ளை யாக இருந்தபோது தொடங்கி ஒரு நாளும் ஓய்வு எடுத்துக்கொள்ளாமல், இரவு பகலாக உழைக்கிறான். என்னவோ, பட்டணம் தன் உடம்புக்குப் பிடிக்க வில்லை என்று சொன்னான். இந்தச் சின்ன வயதிலே அவனுக்கும் பாரிசவாயு வந்த காரணம் தெரிய வில்லை. தஞ்சாவூர்க்குப் போனால் குணமாகிவிடும் என்றும் சொன்னான். அப்படிக் குணமாகிவிட்டால் என் மனக் கவலை தீரும். (சிறிது நேரம் பொறுத்து) அவனுக்குக் குடும்பத்தில் வேறு கவலை இருக்கிறது. பிள்ளை இல்லை என்று சொல்லி, இரண்டாவது கலி

யாணம் செய்துகொண்டான். அதுவும் புதிய உறவில் தேடிச் செய்துகொண்டான். பழங் கால்வாயைத் தூர்க்காதே, புதுக் கால்வாயை வெட்டாதே என்று பெரியவர்கள் சொல்வார்கள். அப்போது சொல்லித் தடுக்கலாம் என்று எண்ணினேன். பிறகு அவனுடைய சோதிடம் பார்த்து அதன்படி ஆகட்டும் என்று இருந்துவிட்டேன். பெண்கள் இரண்டு பேரும் ஒத்துப்போனால் நன்றாக இருக்கும். ஆனால் சின்ன பெண்டாட்டி கொஞ்சம் பொல்லாதவளாக இருக்கிறாள். இதுதான் பச்சையப்பனுடைய வாழ்க்கையில் ஒரு குறையாய்ப் போய்விட்டது.

அய்யா : தஞ்சாவூர்க்கு வந்துபோகும்படியாகச் சொன்னார். உங்களையும் அழைத்து வரும்படி சொன்னார்.

பவுனி : நீ மட்டும் போய்ப் பார்த்துவிட்டு வா. அவனுக்கு அங்கே இருக்கிற மதிப்பைப் பார். பச்சையப்பன் இல்லாமல் அரண்மனையில் தர்பார் நடப்பதில்லை. அங்கே நாள்தோறும் நூற்றுக்கணக்கானவர்களுக்குச் சாப்பாடு போடும் வள்ளல் பச்சையப்பன்தான். அந்தச் சுற்றுப்பக்கத்தில் பச்சையப்பனுடைய தருமம் இல்லாத ஊர் இல்லை. அவனுடைய புகழைப் பேசாத ஆள் இல்லை. நான் போய் வந்திருக்கிறேன் ; பார்த்திருக்கிறேன். நீ போய்ப் பார்த்துவிட்டு வா.

## காட்சி : 17

### கி. பி. 1794 மார்ச்சு 20

**இடம் :** கும்பகோணம், சத்திரம்.

**காலம் :** பிற்பகல்.

**மாந்தர் :** பச்சையப்ப முதலியார், சுப்பம்மாள்.

பச்சையப்பர் : (கட்டிலில் படுக்கையில் கிடந்து நோயால் துன்புறுகிறார்) அக்கா, அக்கா !

சுப்பம்மாள் : (உள்ளே இருந்து கவலைக் குறிப்போடு) இதோ வந்துவிட்டேன் தம்பி (என்று குரல் கொடுத்துக்கொண்டே வருதல்.) ஏன் தம்பி !

பச்சை : வைத்தியர் ஏன் இன்னும் வரவில்லை ?

சுப்பம் : மருந்து கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்.

பச்சை : எப்போது வந்தார் ?

சுப்பம் : நீ தூங்குவது போல் இருந்தாய். அப்போது வந்து பார்த்துவிட்டு எழுப்ப வேண்டாம் என்று சொல்லிவிட்டுப் போனார்.

பச்சை : அய்யோ சிவமே ! நான் எங்கே தூங்கினேன் ? எனக்குத் தூக்கம் வந்து எத்தனை மாதம் ஆச்சு ! ஏதோ கவலையால் கண்ணை மூடிக்கொண்டு எண்ணிக் கொண்டிருந்தேன்.

சுப்பம் : இன்னும் ஏன் இதையும் அதையும் எண்ணிக் கொண்டு மனத்தில் கவலையை வளர்க்கிறாய் ? வேண்டாம் தம்பி.

பச்சை : இப்போது மனத்தில் ஒன்றும் கவலை இல்லை அக்கா. முன்னே தஞ்சாவூரில் இருக்கக் கூடாது என்று கவர்னர் உத்தரவு அனுப்பினாரே, அப்போதுதான்

உண்மையாகவே கவலைப்பட்டேன். வீணான பழியை என் தலைமேல் சுமத்தினார்களே, அவமானம் ஏற் படுத்தினார்களே என்று எவ்வளவோ கவலைப்பட் டேன். அதன்பிறகு நிலைமை அடியோடு மாறிவிட்டது. முன்னிலும் பலமடங்கு மதிப்பும் வந்துவிட்டது. ஸ்ட்ரேஞ்சு துரையும் சரி, தஞ்சாவூர் அரசரும் சரி, கவர்னரும் சரி, இப்போது யாரும் எனக்கு மாறாகப் பேசுகிறதே இல்லையே. அந்தக் கவலை போய் எந்தக் காலமோ ஆச்சு.

சுப்பம் : இருந்தாலும் அப்போது கெட்ட உடம்புதான் இன்னும் தேறவில்லை.

பச்சை : அந்தப் பாரிசவாயு எவ்வளவோ குறைந்துவிட் டது. ஆனால் வேறு வேறு நோய்கள் வந்திருப்பதாக வைத்தியர் சொல்கிறாரே !

சுப்பம் : தம்பி ! இன்னொன்று சொல்கிறேன். கொஞ்சம் கேள். அந்த வேதாரணியத்தாளைப் பற்றியும் உன் மனத்தில் கவலை இருக்கக் கூடாது.

பச்சை : அந்தச் சோழியச் சிறுக்கியைப் பற்றியா ? அவ ளைப் பற்றி எனக்கு என்ன கவலை ? போகட்டும் எந்தக் கதியாவது......

சுப்பம் : தஞ்சாவூரிலிருந்து கும்பகோணம் வந்த பிறகு உடம்பு தேறவில்லையே.

பச்சை : அய்யோ ! (நோயால் துன்புறுதல்.) சிவமே ! அய்யோ ! அப்பா ! (சிறிது நேரம் பொறுத்து) அக்கா ! என் உடம்பைப் பற்றி வைத்தியர் என்ன சொன்னாலும் சொல்லட்டும். எனக்கு என்னவோ இனிமேல் பிழைக்கப் போகிறேன் என்று நம்பிக்கை இல்லை. அதனால்தான் எப்படியாவது இந்தச் சத்தி ரம் கட்டும் வேலையை முடிக்க வேண்டும் என்று

தஞ்சாவூரை விட்டு வந்தேன். அதுவும் ஒரு வகை யாக முடிந்தது. மறுபடியும் திரும்பிப் போகலாம் என்றால்—

சுப்பம் : உடம்பு கொஞ்சம் தேறட்டும், போகலாம். மருந்து சாப்பிட வேண்டும். நேரம் ஆகிறது. கொண்டு வரு கிறேன். (உள்ளே செல்லுதல்)

பச்சை : அப்பா ! சிவமே ! இன்னும் எத்தனை நாளைக்கு இந்தத் துன்பம் ! இந்த வேதனை ! அய்யோ—
(பெருமூச்சு)

சுப்பம் : (வெற்றிலையில் தேன் விட்டுக் குழைத்த மருந்து கொண்டுவந்து) நாக்கை நீட்டு. இதோ இதைச் சாப்பிடு.

பச்சை : (நாக்கை நீட்டி மருந்தைச் சாப்பிட்டு) அக்கா ! இன்னும் ஏன் எனக்கு மருந்து ? இரண்டு வாரமாக நான் படுகிற பாடு தெரியவில்லையா ? அவ்வளவுதான். இனிமேல் என்னை நம்பாதே.

சுப்பம் : (கண்ணீரைத் துடைத்தல். கலங்கிய குரலில் பேசுதல்) இதெல்லாம் சொல்லாதே தம்பி ! தைரிய மாக இரு. உன் உடம்பில் ஒன்றும் நோய் இல்லை. பலவீனம்தான்.

பச்சை : உடம்பு எனக்குத் தெரியும் அக்கா. இனிமேலும் நான் ஏமாந்து இருக்கக் கூடாது. சும்மா இருந்து உயிரை விட்டுவிட்டால், சொத்து எல்லாம் அந்தச் சோழியச் சிறுக்கிக்குப் போய்ச் சேர்ந்துவிடும். அவ ளுக்கு ஒரு பெண் குழந்தை இருப்பதால் இந்த வம்பு. தவிர, சின்னக்காவின் பையன் முத்தய்யனையும் நம்பக் கூடாது. அவனும் அவள்பக்கமாக இருப்பதாகத் தெரி கிறது. நன்றி கெட்ட பயல் ! அவனுக்கு இன்னும் புத்தி வரவில்லை. சிறுபிள்ளைத்தன்மையாக இருக்கிறான்.

சுப்பம் : இதைப் பற்றி எல்லாம் நீ கவலைப்படாதே'ப்பா.

பச்சை : கவலை என்ன அக்கா, கவலை? செய்ய வேண்டியதைச் சரியாகச் செய்துவிட்டுப் போகிறேன். உனக்கும் அய்யாளுக்கும் கொஞ்சம் சொத்து இருந்தால் போதும் ; உங்கள் காலத்தைக் கழிக்கலாம். அம்மாவின் வயிற்றில் ஏழையாகப் பிறந்தேன். எல்லாம் கடவுள் கொடுத்த செல்வம். ஏழைகளுக்கு, திக்கற்றவர்களுக்கு, அவர்களின் வாழ்வுக்குப் பயன்படும்படியாகவும் கோயில்களுக்குப் பயன்படும்படியாகவும் சொத்தை உயில் எழுதி வைத்துவிட வேண்டும். கணக்குப்பிள்ளை வந்தால் எனக்குச் சொல்லு. எல்லா ஏற்பாடும் நாளை மறுநாளே செய்துமுடிக்க வேண்டும்.

சுப்பம் : தம்பி ! (கண்ணீரைத் துடைத்தல்)

பச்சை : இன்னொன்றும் சொல்ல வேண்டும் அக்கா. பட்டணத்துப் பவுனி மாமாவுக்குக் கடிதம் ஒன்று எழுத வேண்டும். பண வரவு செலவு எல்லாம் அவருக்குத் தெரியும். ஒருவருக்குத்தான் நான் பணம் கொடுக்க வேண்டும். பட்டணத்தில் வரதபிள்ளையிடம் இரண்டாயிரம் வராகன் கடன் வாங்கியிருந்தேன். அதில் ஆயிரம் செலுத்திவிட்டேன். இன்னும் ஓர் ஆயிரமும் வட்டியும் கொடுக்க வேண்டும். நாளையே என் உயிர் போய்விட்டாலும் அந்தப் பணத்தை வரதபிள்ளைக்குத் தவறாமல் கொடுத்துவிட வேண்டும்.

சுப்பம் : சும்மா இரு தம்பி. கவலைப்படாதே. அதெல்லாம் பவுனி மாமா பட்டணத்தில் பார்த்துக்கொள்வார். நீ இப்படிப் பேசுவதைக் கேட்டால், என் மனம்—(அழுகிறாள்.)

பச்சை : அய்யோ ! சிவமே, சிவமே !

## காட்சி : 18

### கி. பி. 1794

**இடம் :** *சென்னை, பவுனி நாராயணபிள்ளை வீடு.*

**காலம் :** *காலை.*

**மாந்தர் :** *பவுனி நாராயண பிள்ளை, அவருடைய மகன் அய்யா பிள்ளை.*

அய்யா பிள்ளை : (*கடிதம் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு கூடத்தில் நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் தந்தையைத் தேடிவருதல்*) *அப்பா! முதலியாரிடமிருந்து - கும்பகோணத்திலிருந்து - கடிதம் வந்திருக்கிறது.*

பவுனி : *அப்படியா? உடம்பு நல்லபடி இருக்கிறதாமா? (கடிதம் பிரிக்காமல் இருப்பதைக் கண்டு) பிரி, பிரித்துப் படி'ப்பா, நீயே படி.*

அய்யா : (*பிரித்துப் படிக்கிறார். நிறுத்தி நிறுத்திப் படிக்கிறார் :*) *"தேவரீர் மாமா அவர்களுக்குத் தங்கள் பச்சையப்பன் தெண்டனிட்டு விண்ணப்பம். நாளது பங்குனிமீ 14உ வரைக்கும் இவ்விடத்தில் உள்ளார் அனைவரும் கும்பகோணத்தில் க்ஷேமம். இதற்குமுன் தங்களுக்கு எழுதி யனுப்பியிருக்கிற கடுதாசியினால் சகலமும் விசிதமாயிருக்குமே. இதற்குமுன் எழுதிய காயிதத்தில் கொஞ்சம் பளுவாய் இருக்கிறதாய் எழுதியிருந்தேனே. நேற்றும் இன்றைக்கும் கொஞ்சம் லகுவாய் இருக்கிறது. இனிச் சிவகடாட்சம் எப்படி இருக்குமோ, அறியவேணும்."*

பவுனி : (இடையே குறுக்கிட்டு) எல்லாம் நல்லபடி குண மாகிவிடும். பச்சையப்பனுக்குச் சிவகடாட்சம் இல்லை என்றால் வேறு யாருக்கு உண்டு ? படி, படி.

அய்யா : (தொடர்ந்து படிக்கிறார் :)

"தாங்கள் ஒன்றுக்கும் அதைரியப்படத் தேவை யில்லை. திருவருட் கிருபை செம்மையாய்க் கூட்டி வைக்கும் போலே இருக்கிறது. பங்குனி௴ 30௳ வரைக்கும் பெட்டி இருப்பு இவ்வளவு என்று தெரி யும்படிக்குக் கணக்கு அனுப்பிக்கவும். இதுவும் அல் லாமல் முன்னாலே நான் பட்டணம் வந்திருந்தபோது சிவகங்கையாருக்காக வரதபிள்ளை அவர்களண்டை இரண்டாயிரம் பூவராகன் கடன் வாங்கியிருந்தேனே. அதற்கு உடனே ஆயிர வராகன் செலுத்திவிட்டேன். இன்னும் ஆயிர வராகனும் வட்டியும் செல்லவேணும். அதுவும் செலுத்திவிடுகிறோம் என்று அவருக்குச் சொல்லவும். ஒரு வேளை சரீரத்துக்கு அபாயம் வந் தாலும்—"

பவுனி : அய்யோ ! ஏன் இந்த எண்ணம் ! கடவுள் கைவிட மாட்டார்.

அய்யா : (மறுபடியும் தொடர்ந்து படிக்கிறார் :)

"ஒருவேளை சரீரத்துக்கு அபாயம் வந்தாலும் அவருக்கு ஆயிர வராகனும் அவர்கணக்கில் உள்ள பிரகாரம் உள்ள வட்டியும் கொடுத்துவிட வேண்டியது. அவருட னேயும் இந்தச் சங்கதி சொல்லிவிடவும். மற்றபடி இவ்விடத்தில் நான் நடந்துகொள்ள வேண்டியதற்கு இன்னபடி என்று நிருபம் தயவு செய்யவும். வேணும் விண்ணப்பம். மற்றக் காரியங்கள் எல்லாம் நான் எல்லாம் வரையறவு பண்ணியிருக்கிறேனே அல்லாமல், வித்தியாசம் இராது. தங்கள் சித்தம் அறியவும்."

பவுனி : (பெருமூச்சு) கடவுள் காப்பாற்ற வேண்டும். (சிறிது பொறுத்து) பார்த்தாயா! இவ்வளவு சம்பாதித்தும், செல்வாக்காக இருந்தும், எவ்வளவு உண்மையாக நடக்கிறான்! மற்றவர்களின் சொத்து என்றால் நஞ்சாகக் கருதுகிறான். இதுதானே நாணயம்! இதுதானே உண்மை! இப்படிப்பட்ட உத்தமனுக்கும் நோய் வர வேண்டுமா? வந்த நோய் உடனே தீர்ந்து போகக் கூடாதா? எவ்வளவு கவலை இருக்கும், பாவம்! (பெருமூச்சு; மூக்கின்மேல் விரல் வைத்தபடி அமைதியாக இருத்தல்.)

## காட்சி : 19

கி. பி. 1798

**இடம் :** *சிந்தாதிரிப்பேட்டை உலகப்ப மேஸ்திரி தெரு.*

**காலம் :** *மாலை.*

**மாந்தர் :** *பச்சையப்ப முதலியாரின் பழைய கணக்குப் பிள்ளை, ஓதுவார் ஒருவர், பச்சையப்பரின் பழைய வேலையாள்.*

கணக்குப்பிள்ளை : *(ஓதுவாரை வழியில் கண்டு) என்ன ஓதுவார் ?*

ஓதுவார் : *ஓ ஓ ! கணக்குப்பிள்ளையா ? என்ன அய்யா ?*

கணக்குப் : *எப்படி இருக்கிறீர்கள் ? சுகம்தானா ? கண்ணுலே பார்த்து எத்தனையோ காலம் ஆனதே !*

ஓதுவார் : *எனக்கு இந்தப் பக்கத்தில் என்ன வேலை இருக்கிறது ? உலகத்திலேயே என்ன வேலை இருக்கிறது என்று தோன்றுகிறது. வள்ளல் பச்சையப்ப முதலியார் மறைந்தபிறகு, இந்த வாழ்க்கையே என்னவோ போல் இருக்கிறது.*

கணக்குப் : *என் கதியும் அதற்குமேல் ஆய்விட்டது. நானும் இந்த ஆறு ஆண்டுகளாகக் கொம்பு இல்லாத கொடி போல் வாடுகிறேன். பச்சையப்ப முதலியாரின் கை போல் இன்னொரு கையைப் பார்க்க முடியவில்லை. அவருடைய முகத்தைப் போல் இன்னொரு முகத்தைப் பார்க்க முடியவில்லை.*

ஓதுவார் : *அதை ஏன் சொல்கிறீர்கள் ? நீங்களாவது எந்த இடத்திலாவது கணக்கு எழுதிப் பிழைத்துக்கொள்ளலாம். நான் என்ன செய்வது என்று தெரியவில்லை.*

நான் தேவாரம் பாடினால் கேட்பதற்கு ஆள் இல்லையே. நான் கற்றுக்கொண்ட தேவார இசையை வீட்டில் பாடி நானே கேட்டுக்கொண்டிருக்க வேண்டியதுதான். இன்னும் கொஞ்ச காலத்தில் தேவாரமும் மறந்து போகும் போல் இருக்கிறது. அதற்கு அப்புறம் நான் கத்தரிக்காய் விற்றுத்தான் பிழைக்க வேண்டுமோ என்னவோ ?

கணக்குப் : என்ன செய்வது ? ஒரு வள்ளல் இருந்தால் தான் தேவாரமும் வாழ முடியும் ; ஓதுவாரும் வாழ முடியும். அது போகட்டும் ; நம்முடைய கதை எப் படியோ ஆகட்டும். அவருடைய—

ஓதுவார் : ஆமாம் ; பச்சையப்ப முதலியாருடைய குடும்பம் எங்கே இருக்கிறது ? என்ன ஆயிற்று ? கும்பகோணத் திலிருந்து திருவையாற்றுக்கு முதலியார் போனபோது நானும் போனேன். 1794 மார்ச்சு 31-ம் தேதி அந்தத் திங்கட்கிழமை அமாவாசை நாளை நான் மறக்க முடியா மல் செய்துவிட்டுப் போய்விட்டார் முதலியார். நானும் அப்போது உடன் இருந்தேன். கடைசி நேரத்தில் என் கடமையைச் செய்தேன். தேவாரம் பாடினேன். அவர் விருப்பமாகக் கேட்கும் அந்தப் " புலனைந்தும் " பாடினேன். ஆவி பிரிந்தது. உலகமே இருண்டு விட்டது போல் ஆகிவிட்டது. அப்புறம் குடும்பத்தில் என்ன நடந்தது, அவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்று ஒன்றும் தெரியாது. நினைத்தாலும் வயிறு கலங்குகிறது. அப்படிப்பட்ட வள்ளல் - உத்தமர் - அவருடைய வாழ்வும் மறைந்துவிட்டது ; கனவாகி விட்டது ; கதையாகிவிட்டதே.

கணக்குப் : குடும்பத்துச் செய்திகள் கேள்விப்பட்டால் நன்றாக இல்லை. நானும் வேலையை விட்டு விலகி

விட்டேன். குடும்பம் அடுத்த மூன்றும் நாளிலேயே அமர்க்களம் ஆகிவிட்டது. நான் அப்போது தஞ்சா ஷூரில் இருந்தேன்.

ஓதுவார் : நானும் ஏதோ அரைகுறையாகக் கேள்விப்பட் டேன். உண்மை சரியாகத் தெரியாது. அப்புறம்?

கணக்குப் : அந்தத் தடிப்பயல் முத்தய்யன் தெரியுமே!

ஓதுவார் : அவனு? முதலியாரின் சின்ன அக்காவின் மகன் - அவன்தானே ?

கணக்குப் : அவனேதான்.

ஓதுவார் : என்ன செய்தானும் ?

(அப்போது பச்சையப்பரின் பழைய வேலையாள் ஒருவன் வருகிறுன்.)

வா'ப்பா. எங்கே இருக்கிறுய் ?

வேலையாள் : பவுனிபிள்ளை வீட்டில் இருக்கிறேனுங்க. ஓ! ஓதுவாரா ? என்ன இப்படி உருக்குலைந்து போயிருக்கிறீர்கள் ?

கணக்குப் : என்ன'ப்பா ! காரணம் சொல்ல வேண்டுமா ? முதலியார் போனதும் எங்கள் வாழ்வே போய்விட்டதே!

வேலையாள் : உண்மைதான் அய்யா ! என்னுடைய அம்மா அப்பா இறந்தபோதும் நான் அவ்வளவு கவலைப்பட வில்லை. அடடா ! முதலியார் இறந்துவிட்டார் என்று கேள்விப்பட்டதும் அங்கங்கே உள்ளவர்கள் கதறிக் கலங்கினுர்களே, அதை வாயால் சொல்லவே முடி யாது. அவர் போனது, எத்தனையோ குடும்பங்களில் இடிவிழுந்தது போல் ஆய்விட்டது. அய்யய்யோ ! நினைத்தாலும் மனமே கலங்குகிறது.

கணக்குப் : மூத்த அம்மா, முதலியாருடைய அக்கா எல் லாரும் எப்படி இருக்கிறுர்கள் ? போய்ப் பார்க்கி றுயா ? ஏதாவது தெரியுமா ?

வேலையாள் : போய்ப்பார்க்கிறேன் : அவர்களும் பவுனி பிள்ளை வீட்டுக்கு அடிக்கடி வருகிறார்கள். அந்த முத்தய்யனுக்கும் அவர்களுக்கும் பொல்லாத பகை. வழக்கு நடக்கிறது.

ஓதுவார் : இளைய அம்மாவும் முத்தய்யாவும் ஒருகட்சியா ?

வேலையாள் : முதலியாரின் தலைதிவசம் வருவதற்குள் இளைய அம்மா இறந்துவிட்டார்களே. அந்தக் குழந்தை இருந்ததே அதுவும் உடனே இறந்துவிட்டது. இப்போது தொல்லைகொடுப்பவன் அந்த முத்தய்யன்தான்.

ஓதுவார் : அட பாவமே ! அப்படியா ஆகிவிட்டது குடும்பம் ! முத்தய்யனு தொல்லை கொடுக்கிறான் ?

கணக்குப் : அவன்தான் எல்லாவற்றிற்கும் முதல் காரணம். முதலியார் இளைய மனைவிக்கு ஒன்றும் எழுதிவைக்காமல் விட்டுவிட்டார். ஆனால் முத்தய்யனுக்கு-அக்கா மகனாயிற்றே - அனாதைப் பிள்ளையாயிற்றே - என்று 5000 வராகன் உயிலில் எழுதிவைத்திருக்கிறார். அப்படியிருந்தும் அந்த நன்றி கெட்ட பயல் இப்படிச் செய்கிறான். இன்றைக்கா செய்கிறான் ? உயிர்போன மூன்றும் நாளே என்னென்னவோ செய்துவிட்டான். முதலியாருடைய அக்காவையும் மூத்த அம்மாவையும் தஞ்சாவூர்க்குப் போகாதபடி தடைசெய்தான். பதினாறும் நாள் காரியமும் நடக்கவிடவில்லை. வீடும் சொத்தும் முத்திரைபோடச் செய்தான். கடைசியாகப் பவுனி பிள்ளை தலையிட்டுக் காப்பாற்றினார். வழக்குமட்டும் இன்னும் முடியவில்லை. நடந்துகொண்டே இருக்கிறது.

ஓதுவார் : சிவசிவ ! கேட்கவே நன்றாக இல்லை. புண்ணியவான்குடும்பத்தில் இப்படியா வழக்குநடக்க வேண்டும்?

வேலையாள் : கொடுமை’ங்க, கொடுமை. கேட்கக் கொடுமையாக இருக்கிறது. உலகம் பொல்லாதது’ங்க.

கணக்குப் : ஆனால் ஒன்று சொல்கிறேன். இப்போது என்ன நடந்தாலும் நடக்கட்டும். கடைசியில் பாருங்கள் : எல்லாம் சீராக முடியும். பச்சையப்ப முதலியார் நல்ல வழியில் உழைத்தார். நல்லபடி பணம் சேர்த்தார். நல்ல நெறியில் செலவு செய்தார். நல்ல எண்ணத்தோடு சேர்த்துவைத்தார் ; நல்ல நோக்கத்தோடு எழுதிவைத்தார். அதனால் நல்ல தருமத்துக்கே பயன்படும். பாருங்கள். இப்போது யார் என்ன இடையூறு செய்தாலும் கடைசியில் நல்ல வழிக்கே பயன்படப் போகிறது. பாருங்கள். நல்ல விதை விதைத்தால் நல்ல செடிதான் முளைக்கும். நல்லவர் எண்ணம் நல்லபடியே முடியும். நான் சொல்கிறேன், பாருங்கள்.

ஓதுவார் : வயது நாற்பதுதான். அதற்குள் எவ்வளவு பணம் சேர்த்துவிட்டார். எவ்வளவு செலவு செய்தார் ! வள்ளல் வாரி வாரி இறைத்தார். காசிமுதல் ராமேசுவரம்வரையில் எத்தனை கோயிலுக்குப் பணிசெய்தார் ! எத்தனை குடும்பங்களைக் காப்பாற்றினார் ! ஒரு மனிதர் ஒரு பிறவியில் செய்யக் கூடிய வேலையா இவ்வளவும் !

கணக்குப் : அதை எல்லாம் நினைக்கவே முடியாது ! இன்னொரு மனிதர் பச்சையப்ப முதலியாரைப் போல் பிறக்கப் போவதும் இல்லை ; நாம் பார்க்கப் போவதும் இல்லை. சரி ; கொஞ்சம் அவசரமான வேலையாகப் போக வேண்டும் ; வரட்டுமா ?

ஓதுவார் : மறக்காதீர்கள் அய்யா ! நினைவு இருக்கட்டும்.

கணக்குப் : ஏழை, நான் நினைத்து என்ன செய்யப்போகிறேன் ?

வேலையாள் : நானும் வரட்டுங்களா ?

ஓதுவார் : சரி. போய்வா.

## காட்சி : 20

### கி. பி. 1846 அக்டோபர் 2

**இடம் :** சென்னை, எஸ்பிளனேட் (இப்போது நேத்தாஜி சுபாஷ்சந்திரபோஸ் ரோட்).

**காலம் :** மாலை.

**மாந்தர் :** பொதுமக்கள், சீனிவாச பிள்ளை முதலான அறக் காப்பாளர் (Trustees), அட்வகேட் ஜெனரல் ஜார்ஜ் நார்ட்டன்.

(பொதுமக்களும், சீனிவாச பிள்ளை முதலான அறக்காப்பாளரும் குழுமியிருக்கும் கூட்டத்தில் ஜார்ஜ் நார்ட்டன் பேசுதல்)

ஜார்ஜ் நார்ட்டன் : இன்று எனக்கு உண்டாகிய மகிழ்ச்சியை வெளியிட்டுச் சொல்லத் தகுந்த சொற்கள் இல்லை. இன்று கொண்டாடுகிற இந்த அடிப்படை அமைக்கும் கால்கோள் விழாவினால் இந்த நாட்டு மக்கள் இனிமேல் அடையப்போகிற பெருமைகளை எண்ணி என் மனம் பூரிக்கிறது. தரும சிந்தை உள்ள கொடையாளிகள் கல்விக்காக வைத்துவிட்டுப் போன செல்வத்தைக் கொண்டு மிகப் பெரிய கட்டிடம் கட்ட எண்ணி அதற்கு அடிப்படை போடுவதற்காக இவ்வளவு பெரிய கூட்டம் இந்த நாட்டில் இதற்குமுன் எப்போதும் கூடியதில்லை......இந்தப் பெரிய அறநிலையத்தைக் காப்பாற்றி நடத்தும் பொறுப்பு உங்களுடையதே. அந்தப் பொறுப்பை ஏற்று நடத்தத் தகுந்தவர்கள் உங்களிடையே இருக்கிறார்கள். உங்கள் தலைவராகவும் என் நண்பராகவும் உள்ள சீனிவாசபிள்ளை மிகவும்

புகழ்பெற்றவராக விளங்குகிருர். இவரோடு இந்தப் பதினைந்து ஆண்டுகளாக எனக்குப் பழக்கம். இவர் உங்கள் நாட்டுக்காக மிகவும் பாடுபட்டுக்கொண்டு வருகிருர். நாட்டின் கல்வி முன்னேற்றத்துக்காகவும் ஒற்றுமைக்காகவும் இவர் ஓயாமல் உழைத்துவருகிருர். நானும் இவரைப் போலவே உங்கள் நாட்டுக் கல்வி முன்னேற்றத்துக்காகப் பாடுபட்டுவருகிறேன். ஆனல் இவரே என்னைவிடப் பாக்கியம் உள்ளவர். ஏன் என்ருல், நான் உங்களோடு இறுதிவரையில் இருந்து என் வாழ்நாளைக் கழிக்க முடியாதவன். ஆகையால் நீங்கள் நாளடைவில் என் பெயரை மறந்துவிடுவீர்கள். என் நினைவே இல்லாமல் போய்விடும். இதைவிட மிகுதியாக நான் வருந்தும் காரணம் ஒன்று உண்டு. அதாவது, இப்படி நான் உங்களுக்குத் தொண்டு செய்வதால், என்நாட்டு மக்கள் என்னைப் பழிப்பார்களோ, என்னவோ? இதற்காக நான் அஞ்சவில்லை. என் செயல்களையும் மனச்சான்றையும் ஆராய்ந்தால், நான் குற்றம் இல்லாதவனுக இருக்கிறேன்..........

பச்சையப்ப முதலியாரின் கருத்தையும் இந்த நாட்டு மக்களின் வழக்கத்தையும் ஒட்டி, நீதிமன்றத்தின் ஏற்பாட்டின்படி, கல்வி வளர்ச்சிக்காக நான்கு லட்ச ரூபாய் வரையில் கொடுக்கப்பட்டது. இதை மற்றவர்கள் அழிக்காதபடிக்கும் கவர்ந்துகொள்ளாதபடிக்கும் காப்பாற்றுவதற்காக நான் பெருமுயற்சி செய்யவேண்டியிருந்தது. பச்சையப்ப முதலியாரின் பெயரால் தருமப்பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த வேண்டும் என்று ஓயாமல் முயற்சி செய்துவந்தேன். இது எல்லோருக்கும் நன்ருகத் தெரியும். இதனல் என்னைச் சிலர் பழிக்கக் கூடும். ஆனல் இந்த நோக்கம் வெளிப்

பட்டால் நான் இதனால் அமைதி பெறுவேன்; மகிழ்ச்சி அடைவேன்......600 சிறுவர்கள் வரையில் பயனுள்ள கல்வியைப் பெற்று நல்ல வழியில் வாழ்வதற்கு உதவியாக இருப்பதால், தருமங்களுக்குள்ளே இதை முதன்மையான தருமம் என்று சொல்ல வேண்டும். பலர் இந்தப் பயனைப் பெற்றிருக்கிறார்கள். இன்னும் இப்படி ஆயிரக்கணக்கானவர்கள் பெறப் போகிறார்கள். இந்த நல்ல பயன் இந்த நாடு முழுவதும் பரவப் போகிறது.........

இந்த அறநிலையத்தார் கட்டப்போவது மிகப் பெரிய கட்டிடம். இது நெடுங்காலம் நிலையாக இருக்க வேண்டும். இதனால் நன்மை பெற்றவர்கள், எல்லாம் பச்சையப்ப முதலியாரின் கல்விநிலையத்தால் உண் டாகிய பயன் என்று நினைப்பதற்கு இது ஓர் அடை யாளமாக இருக்கும் என்று நம்புகிறேன். பச்சையப்ப முதலியாருடைய பெயர் என்றென்றைக்கும் அழியாமல் விளங்குவதாக.

## காட்சி : 21

### கி. பி. 1940

**இடம் :** *பச்சையப்பன் கல்லூரி மண்டபம். மண்டபத்தின் மேடையில் பச்சையப்பர் படம் மாலை சூடி விளங்குகிறது.*

**காலம் :** *மாலை 6 மணி.*

**மாந்தர் :** *அற நிலையத்தார், கல்லூரித் தலைவர், பேராசிரியர்கள், மாணவர்கள், தமிழ்மன்றச் செயலாளர்.*

செயலாளர் : *(நன்றி கூறிப் பேசும் பேச்சு.)*

*பெருமக்களே !*

*பச்சையப்பன் கல்லூரித் தமிழ் மன்றத்தின் அழைப்புக்கு இணங்கி வந்திருந்து விழாவைச் சிறப்பித்த உங்கள் அனைவர்க்கும் மன்றத்தின் சார்பாக நன்றி கூறுகிறேன். இச்சமயத்தில் என் மனத்தில் எழுந்த ஓர் எண்ணத்தைத் தெரிவித்து உங்களிடம் விடைபெறுவேன்.*

*பச்சையப்ப முதலியார் ஏழையாய்ப் பிறந்து வளர்ந்தவர் ; நாற்பது வயதிற்குள் பெருஞ் செல்வராய் விளங்கிப் பெரிய பெரிய தருமங்கள் பலவற்றைச் செய்து முடித்தவர். இப்படிப்பட்டவரின் பெயரைச் சொல்ல மக்கள் இல்லை, மரபினர் இல்லை என்று பலர் கூறுகிறார்கள். ஆனால், எனக்கு அது பொருத்தமாகப் படவில்லை. இந்தக் கல்லூரியிலும் மற்றக் கல்விநிலையங்களிலும் படித்து வெளியேறுகிறவர்கள் யார் ? ஆண்டுதோறும் நூற்றுக்கணக்காக, ஆயிரக்கணக்காகப் படித்துச் செல்லும் மாணவர்கள் யார் ? அவர்கள் எல்லோரும் பச்சையப்பன் மரபினர்*

அல்லவா ? ஏறக்குறைய நூறு ஆண்டுகளாகப் பச்சையப்பன் பெற்று வளர்க்கும் பிள்ளைகளுக்குக் கணக்கு உண்டா ? பழைய பிள்ளைகள் இருக்கட்டும் ; என்னோடு இன்று கல்லூரியில் கற்றுவரும் புதியபிள்ளை கள் எத்தனை பேர் ? இனி வருங்காலத்தில் படிக்க வரக் கூடிய எதிர்காலப் பிள்ளைகள் எத்தனை பேர் ? இவ்வளவு பெரிய குடும்பத்துக்கும் ஒப்பற்ற கல்வித் தந்தையாக விளங்குகிறார் இதோ இந்தப் பச்சையப்ப வள்ளல் (மாலை சூடிய படத்தைச் சுட்டிக்காட்டி.) நம்முடைய பச்சையப்ப குடும்பம் மிகப் பழைய குடும்பம் ; மிகப் பெரிய குடும்பம் ; ஜார்ஜ் நார்ட்டன் சீனிவாசபிள்ளை போன்ற பெரியோர்களின் ஆசிபெற்ற குடும்பம். இந்தக் குடும்பத்துப் பிள்ளைகளில் எத் தனையோ பேர் நீதிமன்றங்களில் நீதியாளர்களாக விளங்கினார்கள் ; விளங்குகிறார்கள் ; விளங்குவார்கள் ! எத்தனையோ பேர் அரசாங்கத்தில் அமைச்சர்களா கத் திகழ்ந்தார்கள் ; திகழ்கிறார்கள் ; திகழ்வார்கள் ! எத்தனையோ பேர் பேராசிரியர்களாக எழுத்தாளர் களாக அறிஞர்களாக ஒளி பரப்பினார்கள் ; ஒளி பரப்புகிறார்கள்; ஒளி பரப்புவார்கள் ! இதை நினைக்கும் போது பச்சையப்பரின் பெயர் நமக்கு ஊக்கம் அளிக் கிறது ; உணர்ச்சி ஊட்டுகிறது ; இன்ப உயிர்ப்பாக இருக்கிறது ! ஆகையால் வாழ்க பச்சையப்பர் என்று இந்த வள்ளலை (படத்தைச் சுட்டிக்காட்டி) மனமார வாயார வாழ்த்தும் ஒலியோடு உங்களிடமிருந்து விடை பெறுகிறேன். வாழ்க பச்சையப்பர் !

கூட்டத்தார் எல்லோரும் : (எழுந்துநின்று)

வாழ்க பச்சையப்பர் ! வாழ்க பச்சையப்பர் !